புதிய




இண்டர்நேஷனல்
டியோடரன்ட்
உள்ளது

சாதாரண சோப்புகள்.



உடல் வாடையைத் தடுக்காது

புதிய ஷீல்டின்



இண்டர்நேஷனல்
டியோடரன்ட் மட்டுமே
தீவிரமாக உடல் வாடையை
தடுக்கிறது. தன்னம்பிக்கை
புத்துணர்வு தருகிறது . . . மணிக்கு மணி

ஷீல்டு தருகிறது நம்பிக்கை.

## தோழர்கள் • தருவார்கள் • சிறப்புஇடம் - உங்களுக்கே!





# கல்கி

1990 நவம்பர் 18
மலர் : 49 இதழ் : 16
பிரமோதூத கார்த்திகை 2



## துரோகம் — 1, துரோகம் — 2, துரோகம் — 3!

வி. பி. சிங்கின் தலைமையிலான தேசிய முன்னணி அரசு கவிழ்ந்ததற்கு யாரும் அதிகமாக வருத்தப்பட வேண்டியதில்லை. ஆனால் அது கவிழ்க்கப்பட்ட முறைக்குச் சிந்திக்கத் தெரிந்த ஒவ்வோர் இந்தியக் குடிமகனும் வெட்கப்பட்டு விசனிக்கவே வேண்டும்.

பதினோரு மாத காலத்தில் வி. பி. சிங் ஆட்சியின் சாதனைகள் பல உண்டு. ராஜீவின் யதேச்சாதிகாரப் போக்கிலிருந்து ஒரு மாறுதலாக, அனுசரித்துப் போகும் அரசைப் பார்த்தோம்; லஞ்ச ஊழல்கள் மீது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன; ஆட்சியில் ரகசியங்கள் குறைந்து பகிரங்க அரசியல் நடந்தது; டி. வி. — ரேடியோ நிலையங்களுக்குச் சுயாட்சி வழங்கப்பட்டது; கிராமப்புற வளர்ச்சியில் அதிக கருத்துச் செலுத்தப்பட்டது; புதிய ஏற்றுமதி இறக்குமதிக் கொள்கை, தொழில் கொள்கை முதலியன சரியான திசையில் அரசு சென்றதை உறுதிப்படுத்தின. ஆனால் இதற்கு மறுபுறமாக விலைவாசி உயர்வு மக்களை வருத்தியதுடன், பஞ்சாப், காஷ்மீர் பிரச்னைகள் தீவிரமடைந்தன. நண்பர்களின் தவறான யோசனையை ஏற்று மண்டல் அறிக்கையை நன்கு சிந்திக்காமல், அவசரப்பட்டு அமுலாக்கியதில் இளைஞர்கள் பலர் உயிர்த் தியாகம் செய்ய நேர்ந்தது. ராமஜென்மபூமி விவகாரம் பூதாகார வடிவமெடுத்தது. இவையெல்லாம் ஆட்சி மீது ஏமாற்றத்தை மட்டுமின்றி, வெறுப்பைக் கூட ஏற்படுத்தின.




ஆயினும் வி. பி. சிங்கின் நேர்மையையும் நாட்டுப்பற்றையும் பரந்த மனப் பான்மையையும் பேச்சுவார்த்தைகள் மூலம் பிரச்னைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என்ற பெருநோக்கையும் யாரும் சந்தேகிக்க முடியாது. எனவே அவர் சில அம்சங்களில் தோல்வி கண்டார் எனில், அதற்கு அவரை மட்டும் காரணமாக்க முடியாது. கூடவி ருந்து குழி பறித்தவர்களே முக்கிய காரணம். இவர்களைச் சமாளிக்கவே இருபத்தி நாலு மணி நேரம் போதவில்லை என்னும் போது நல்லாட்சி வழங்குவது எப்படி?

பயங்கரமான லஞ்ச ஊழல் ஆட்சியாக விளங்கிய ராஜீவ் அரசை நீக்கத் தேர்தலில் பூரண ஒத்துழைப்புத் தந்ததுடன், தேசிய முன்னணி அரசு ஐந்தாண்டுகள் நீடிக்கவும் முழு ஆதரவு தருவதாக வாக்களித்த பாரதிய ஜனதா காலை வாரி விட்டு விட்டது. இது துரோகம் நெ. 1. தனது தேர்தல் வெற்றிகளுக்கு அது விசுவ ஹிந்து பரிஷத், ஆர். எஸ். எஸ். போன்ற அமைப்புக்களின் உதவியை நாடுவதால் அவர்கள் கைப்பாவை யாகி, ரதயாத்திரை நடத்தி, பிரதமருக்கு ஒரு தர்மசங்கடத்தை ஏற்படுத்தியது. எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேளாமல் பிடிவாதம் காட்டியது.

துரோகம் நெ. 2, சந்திரசேகரும் தேவிலாலும் சேர்ந்து செய்ததாகும். இந்திய சரித்திரத்தில் ராஜ்நாராயணனுக்கும் சரண்சிங்குக்கும் இணையான முதல்தர வில்லன் களாக இவர்கள் இடம்பெறுவார்கள். வடமாநிலங்களில் மக்கள் வோட்டளித்தது வி.பி.சிங்கை மனத்தில் இருத்தித்தான் என்பதை உணர்ந்துதான் ஆரம்பத்தில் தேவிலால், சந்திரசேகரை ஓரம் கட்டி, வி. பி. சிங் பிரதமராக வழிவகுத்தார். அதே தேவிலால் அதே சந்திரசேகருடன் இணை சேர்ந்து இன்று வி. பி. சிங்கைக் கவிழ்த்தார் என்றால் அதற்குக் காரணம் வடிகட்டின சுயநலம்தான். தமது மகன்களின் அட்டகாசத்தை அடக்க முடியா தவர், மந்திரி சபையில் சக அமைச்சர்கள் மீது அபவாதம் சுமத்தி, தமது ராஜினாமாவைக் கோர வேண்டிய நிர்ப்பந்தத்தைப் பிரதமருக்கு உண்டாக்கி, தருணம் பார்த்திருந்து இன்று பழிவாங்கி விட்டார். வி. பி. சிங்கை ஜனதாதள நாடாளுமன்றக் கூட்டத்தில் சந்திக்கத் திராணியின்றி, தனியே கூட்டம் நடத்தி, கட்சியைப் பிளந்ததை எந்த வகையிலும் இவர்களால் நியாயப்படுத்தவே முடியாது.

இந்த வடிகட்டின துரோகங்களுக்கெல்லாம் மேலான மகத்தான துரோகம் ஒன்று இருக்க முடியுமானால் அது சந்திரசேகரை அழைத்து, ராஜீவ் ஆதரவுடன் ஆட்சி நடத்து மாறு ஜனாதிபதி கூறுவதே ஆகும். சிங்கம் இருந்த இடத்தில் குள்ள நரியை அமர்த்துவது போன்ற இந்தக் காரியத்தைச் செய்து பாரத மக்களுக்கு நம்பிக்கைத் துரோகத்தை இழைக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை ஜனாதிபதிக்கு ராஜீவின் திட்டமிட்ட சூழ்ச்சி உருவாக்கியிருக்கிறது. பொதுத் தேர்தல் ஒன்று மட்டுமே இந்தத் துரோகங்களுக்கெல்லாம் தக்க பதிலாக அமைய முடியும்.

தேசிய அரசு என்ற கருத்து கேட்பதற்கு நன்றாக இருக்கிறது. ஆனால் நாடெங்கிலும் நாலாந்தர அரசியல்வாதிகளை வைத்துக் கொண்டு இதைச் சாதிக்கப் பார்ப்பது, குரங்கு கையில் பூமாலை கொடுப்பது போன்றதுதான்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

எமர்ஜென்ஸி பக்கம்!

# மழை சென்னையை நரகமாக்க வேண்டுமா?

சென்னை கார்ப்பரேஷன் குழாய்களில் தினசரி தண்ணீர் விடப்படலாம் என்பதை அறிய மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் கடும் மழையால் எவ்வளவு சேதங்கள்! வீடிழந்த மக்கள் கார்ப்பரேஷன் பள்ளிகளில் உணவுக்குக் கையேந்தி நிற்பதும்; ஜெறுகள் வெட்டப்பட்டனவோ என்று எண்ணும்படி குழி விழுந்து போன சாலைகளும், வீடு இடிந்ததால் சிக்கி மாண்ட நபர்களும்; தாழ்வான பகுதிகள் வெள்ளக்காடாகிவிட, வேதனைக்குள்ளாகும் வாகன ஓட்டிகளும் நம் கவனத்தைக் கவர்ந்து விசனத்தை அதிகரிக்கின்றனர். அரசாங்கம் தாற்காலிகமாக எவ்வளவோ செய்கிறது; ஆனால் இதற்கு நிரந்தரப் பரிகாரம் கிடையாதா?

**தமிழ்நாடு அரசின் நகர வளர்ச்சி அமைப்பைச் சேர்ந்த திட்ட மேலாண்மைக் குழுவின் உறுப்பினர் ஒருவரைக் கேட்டோம். சாமுவேல் தம்பு சொல்கிறார்:**

"அடையாறு, கூவம், பக்கிங்காம் கால்வாய் இவை மூலமாகத்தான் சென்னையில் பெய்யும் மழை நீர் கடலுக்குள் செல்ல வேண்டும். சென்னையில் உள்ள எல்லா பகுதிகளிலும் மழை நீர் வடிகால் கால்வாய்கள் கட்டப்பட வேண்டும். இதற்கும் கழிவு நீர் கால்வாய்க்கும் சம்பந்தமில்லை. அப்படிக் கட்டப்பட்ட வடிகால் கால்வாய்கள், கூவம் அல்லது அடையாறுடன் இணைக்கப்



பட வேண்டும். வடகிழக்குப் பருவ மழைக் காலத்தில் கடல் மிகவும் கொந்தளிப்பாக இருக்கும். அதனால் கூவம், அடையாறு தண்ணீரைக் கடல் ஏற்றுக் கொள்ளாது. தொடர்ந்து மழை பெய்து கொண்டிருந்தால், இதுபோன்ற நிலையில் நகரமே மூழ்கிப் போய் விடும். ஆகையால், கடலுக்குள் தண்ணீர் சென்று அடைய சமீபத்திய தொழில் நுட்பத்தின் அடிப்படையில் ஏற்பாடு செய்ய வேண்டும். இதற்கெல்லாம் ஒரு மாஸ்டர் பிளானுக்கான ஆய்வு நடக்க இருக்கிறது.

''மேலும் நகரின் மேற்புறங்களில் செயற்கை ஏரிகள் உருவாக்கப்பட வேண்டும். உதாரணமாகச் சொல்வதென்றால் செம்பரம்பாக்கம் ஏரி நிரம்பி விட்டதென்றால் அடையாறில் விட்டு விடுகிறார்கள். அதன் விளைவாக அடையாறின் தாழ்வான கரைப் பகுதிகளில் (கோட்டூர்புரம்) வெள்ளம். பரிகாரமாக செம்பரம்பாக்கத்துக்கு அடுத்தபடியாக ஒரு ஏரி உருவாக்கப்பட்டால் அதில் தண்ணீரை நிரப்பிக் கொள்ளலாம். இதே போல் வட சென்னையில் கொடுதலையாற்று வெள்ளத்தையும் கட்டுப்படுத்த முடியும்.

''மழை நீருக்கு வடிகால் கால்வாய்கள் கட்டினால் மட்டும் போதாது. அவற்றைச் சரியாக நிர்வகிக்க வேண்டும். அவ்வப்போது சுத்தப்படுத்தி வைத்திருக்க வேண்டும். இதில் மக்கள் பங்கு மகத்தானது. மக்கள் தங்கள் பொறுப்பையுணர்ந்து, கால்வாய்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

''சென்னையில் ஏற்கெனவே பல ஏரிகள் இருக்கின்றன. ஒன்று நிரம்பி விட்டால் மற்றொன்றுக்குத் தண்ணீர் செல்லுமளவுக்கு ஏற்கெனவே ஏற்பாடுகள் இருந்தன. ஆனால் புது லே-அவுட்டுகள் போடப்பட்டு வீடுகள் உருவாக்கப்பட்டதால் வழிகள் அடைக்கப்பட்டுத் தண்ணீர் போக வழியில்லாமல் தேங்கி விடுகிறது. இதற்கும் ஓர் உதாரணம் சொல்கிறேன். அம்பத்தூர் ஏரி நிரம்பி கொரட்டூர் ஏரிக்குத்

## பாக்'கின் புதிய பிரதமர்

அரசியலில் தீவிரமாக நுழைந்து, பத்தே வருடங்களில் பிரதமர் பதவிக்கு உயர்ந்திருக்கிறார், 41 வயதான மியான் நவாஸ் ஷெரிப். இவரது முன்னோர்கள் காஷ்மீர் பகுதியைச் சேர்ந்தவர்கள். அப்பா அமிர்தசரஸ் நகரில் வசித்தவர். பாக் பிரிவினையின் போது நவாஸ் ஷெரிப் குடும்பம் பாகிஸ்தானிலுள்ள லாஹூருக்குக் குடிபெயர்ந்தது. அங்கே ஒரு இரும்பு வார்ப்படத் தொழிற்சாலை ஆரம்பித்து ஓஹோவென்று உயர்ந்தது. இந்த வளர்ச்சி அரசியல்வாதிகளுக்கு எரிச்சலை ஊட்டியது. அன்று ஆட்சியிலிருந்த புட்டோ, நவாஸ் ஷெரிப் குடும்பத்தாரின் வார்ப்படத் தொழிற்சாலையைத் தேசியமயமாக்கினார். ஆனால் ஷெரிப் குடும்பம் ஏற்கெனவே வியாபாரத்தை வேறு பல வழிகளில் விருத்தி செய்து கொண்டிருந்ததால் சரிந்து விழாமல் தப்பித்தது. அப்போதிலிருந்தே புட்டோ குடும்பத்தின் மீது தனிப்பட்ட முறையில் வெறுப்பை வளர்த்துக் கொண்டு, சமயம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் ஷெரிப். கூடவே முஸ்லீம் லீக் கட்சியில் பிரமுகராக வளர்ந்து வந்தார்.

ஜியா பதவிக்கு வந்தவுடன் ஷெரிப் காட்டில் மழை. அவரது குடும்பத் தொழில்களுக்கு அரசாங்க உதவியும், வங்கிக் கடன்களும் தாராளமாக வழங்கப்பட்டன. பாகிஸ்தானின் முதல் இருபது பணக்காரர்களுள் ஒருவரானார்! பாகிஸ்தானின் (மேற்கு) பஞ்சாப் மாநில அரசில் பங்கு பெற்று 1985ல் முதல்வர் ஆனார். இஸ்லாமிய ஜனநாயக முன்னணி (இஸ்லாமிக் ஜம்ஹூரி இத்தஹாத்) என்ற ஒன்பது கட்சி கூட்டணியின் தலைவர் பதவியேற்று ''பேநசீரை விரட்டும் வரை ஓய்வில்லை'' என்று மேடைக்கு மேடை முழங்கினார்.

பஞ்சாப் முதல்வராக ஷெரிப் இருந்த போது, இந்தியாவில் உள்ள பஞ்சாப் பயங்கரவாதிகளுக்கு எல்லாவித உதவிகளையும் செய்து கொண்டிருந்தார். காலிஸ்தான் என்ற தனி நாடு உள்ளதாகச் சொல்லிக் கொண்டு லண்டனிலுள்ள ஜகஜித் சிங் சவுகானோடு நவீன தகவல் தொடர்பு (fax) வைத்துக் கொண்டிருக்கிறார் ஷெரிப்!

மேடைகளில், ஆவேசமாகப் பேசுவது மட்டுமல்லாமல், அவ்வப்போது நகைச்சுவையையும் கையாண்டு கூட்டத்தைத் தம் பக்கம் இழுப்பதில் வல்லவர் ஷெரிப். நேரம் கிடைக்கும்போதெல்லாம் லதா மங்கேஷ்கரின் பாடல்களை விரும்பிக் கேட்பார். வீடியோவில் அடிக்கடி பார்ப்பது தர்மேந்திரா நடித்த ஹிந்தி படங்கள்.

**புதிய பிரதமர் எப்படி நடந்து கொள்வார்?**

**முன்னாள் வெளியுறவுத் துறைச்**

தண்ணீர் வரும். பின்னர் கொரட்டூரிலிருந்து கொளத்தூர் ஏரிக்குத் தண்ணீர் வரும். இப்போது கொரட்டூருக்கும், கொளத்தூருக்கும் இடையில் ஏகப்பட்ட காலனிகள் உருவாகி விட்டன. இதனால் வழிகள் தடைப்பட்டு தண்ணீர் தேங்குகிறது. இன்னமும் சொல்லப் போனால் ஏரிகளைத் தூர்த்து விட்டு வீடு கட்டுகிறார்கள். இதைத் தவிர்க்க வேண்டும். சென்னையில் இருக்கும் எல்லா ஏரிகளையும் கால்வாய்கள் மூலமாக இணைத்துக் கடைசியாகக் கால்வாய்களைக் கூவத்திலோ அல்லது அடையாறிலோ சேர்த்து விடலாம். தாழ்வான பகுதிகள் அடையாளம் காணப்பட்டு, வீடு கட்டுகிறவர்கள் பூமி மட்டத்திலிருந்து இத்தனை அடி உயரத்தில் கட்ட வேண்டும்' என்று நிபந்தனை விதிக்க வேண்டும். குடிசைப் பகுதிகள் அனைத்தும் அடுக்கு மாடிக் கட்டடங்களாக மாற்றப்பட வேண்டும்.

''தொடர்ந்து மழை பெய்தால் பெரிதும் பாதிக்கப்படுபவை சாலைகள். சென்னையில் இயற்கையிலேயே க்ளிமண் பூமி. இந்த பூமிக்கேற்றபடி, நவீன தொழில் நுட்பத்தில் சாலைகள் போடப்பட வேண்டும். அப்போதுதான் மழை நீர் அரிக்காது. வருடா வருடம் காண்டிராக்டர்களுக்கு பணம் கொடுத்து சாலைகளை உயரமாக்கிக் கொண்டே போவது சரியல்ல. தண்ணீர் தேங்காமல் பார்த்துக் கொண்டாலே சாலைகள் பாதிக்கப்படுவது கணிசமாகக் குறையும்.

— ப்ரியன்.

படங்கள் உதவி: **தினமலர்**



**'எமர்ஜென்ஸி பக்கம்'**
**யோசனை அளித்த வாசகர்:**
**நெல்லை சூரலோன்,**
**பொட்டல்புதூர்.**

---

**செயலர் எம். ஏ. வெள்ளோடி கூறுகிறார்.**

**ந**மது நாட்டைப் போலவே பாகிஸ்தானிலும் விலைவாசிகள் ஏகமாக ஏறிக் கொண்டு போகின்றன. பெட்ரோலியப் பொருட்களுக்குத் தட்டுப்பாடு. அந்நியச் செலாவணி நெருக்கடியும் உண்டு. இந்த நிலையில் உடனடியாக ஷெரிப் உள்நாட்டுப் பிரச்னைகளில்தான் கவனம் செலுத்துவார்.

பாகிஸ்தானில் ஆட்சியாளரைப் பின்புறமிருந்து 'ஆட்டி' வைப்பது ராணுவம்தான். இதுவரை ராணுவத்துக்கு ஆதரவாகப் பேசிக் கொண்டிருக்கும் ஷெரிப், பிரதமராக ஆன பின் எப்படி மாறுவார் என்று சொல்ல முடியாது. அதைப் பொறுத்து ராணுவத்தின் நடவடிக்கையும் அமையும்.

**வ**ளைகுடா பிரச்னையில் அமெரிக்க நிலைக்கு ஆதரவு காட்டும் விதமாக வேறு பல நாடுகளைப் போல் பாகிஸ்தானும், தனது ராணுவத்தை சவுதி அரேபியாவுக்கு அனுப்பியிருக்கிறது. அமெரிக்க வற்புறுத்தலால் பாகிஸ்தான் எடுத்த இந்த நிலைக்குப் பதிலாக மூன்று உறுதிமொழிகளை அமெரிக்காவிடம் பெற்றிருக்கிறது பாகிஸ்தான். 1. அணுசக்தி சம்பந்தப்பட்ட முயற்சிகளுக்குத் தொடர்ந்து ஆதரவு. 2. ஐ.நா. சபையில், காஷ்மீர் மக்கள் பற்றிய தீர்மானம் வரும்போது ஆதரவு. 3. காஷ்மீர், பஞ்சாப் மாநிலங்களில் பயங்கரவாதிகளை ஊக்குவிக்கும் தனது செயலை அமெரிக்கா கண்டுகொள்ளக் கூடாது. இதெல்லாம் இந்தியாவுக்குத் தலைவலியை அதிகரிக்கச் செய்யும்.

நடந்து முடிந்த தேர்தலில் பேநசிருக்கு ஆதரவு இல்லை என்பது தெரிந்து விட்டதால் ஷெரிப், பழிவாங்கும் நடவடிக்கைகளில் ஈடுபட மாட்டார். ஆனால் பேநசீர் மீதும், அவர் கணவர் மீதும் போடப்பட்டிருக்கும் வழக்குகளை வாபஸ் வாங்க மாட்டார்கள். பேநசீர் தேசிய சபையில் (பாகிஸ்தான் நாடாளுமன்றம்) நல்ல எதிர்க்கட்சித் தலைவராகச் செயல்படலாம். ஷெரிப்பைப் பலவீனப்படுத்த எண்ணினால் முஸ்லீம் மதவாதிகளின் ஆதரவு அவருக்குத் தேவைப்படும்.

தொகுப்பு: **தில்லப்பா.**



# டி.வி.விளம்பரங்கள் அரசியல் வசனங்கள்

வாசகர் யோசனை:
இரா. சம்பத்குமார், இராசிபுரம்.


























கருத்து: ஜூலி

# வீட்டிலும் ஒரு

"....நிதானமாக — ஆனால் அழுத்தமாக அவள் காட்டுச்சாளை வாசலுக்கு நடக்க ஆரம்பித்தாள்....."

— எழுதி முடித்து விட்டு ரமணன் நிமிர்ந்தான். புதிதாக ஒன்றைப் பிரசவித்த களைப்பும் — திருப்தியும் இழையோட முகம் விகசித்தது. தலை இலேசாக வலிக்கிறாற் போலிருந்தது. சாரதாவைக் கூப்பிட்டு ஒரு காப்பி போடச் சொன்னால் தேவலை போல் இருந்தது. கூப்பிடவும் வாயெடுத்து விட்டான். அப்போதுதான், கொஞ்ச நேரம் முன்னால் ஏதோ கேட்டுக் கொண்டு வந்த அவளிடம் சுள்ளென்று எரிந்து விழுந்து விரட்டிய ஞாபகம் வந்தது. அப்போது போனவள்தான். ஆளரவமே காணோம். பக்கத்துக் குடித்தனக்காரர்கள் வீட்டு டி.வி. முன்னால் 'ஒலியும் — ஒளியும்' பார்த்துக் கொண்டிருக்கக் கூடும். ஏதோ ஒரு பாட்டு காற்றில் மிதந்து கூடத்தில் நிரம்பி அறைக்குள் வந்து இவனை விசாரிக்க முயன்று கொண்டிருந்தது.

'மனம் இலயித்து நான் எழுதிக் கொண்டிருக்கிற போது சும்மா தொண தொணவென்று கேள்வி கேட்டுக் கொண்டிருந்தால் கோபம் வராதா...?'

— தனக்குத்தானே சமாதானப்படுத்திக் கொள்ள இவன் நினைத்து அடுத்த நிமிடம் வரையில் கூட நிற்கவில்லை... 'என்னதான் இருந்தாலும் அப்படிக் கத்தியிருக்க வேண்டாம்... சே...!' — என்று நொந்து கொண்டான். எழுதி முடித்த கதையின் கற்றை எதிரே காற்றில் படபடத்தது. மனத்திலிருந்த பிரசவ வேதனையும் — பெருமிதமும் போய் உளைச்சல்தான் மீந்தது இப்போது...!

"நீ இப்ப கொஞ்ச நேரம் பேசாமல் இருக்கியா? மனுஷன் ஒரு நாலுவரி எழுதறதுக்குள்ள எத்தினி கேள்வி கேப்ப நீ..?" — உச்சந்தலையெல்லாம் சூடாகி எரிய, தொண்டை நரம்புகள் புடைக்க இவன் கத்தியதைக் கேட்டு அப்படியே ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தாள் சாரதா. படித்துக் கொண்டிருக்கும் போதோ, எழுதும் போதோ ஏதாவது கேட்டுத் தொந்தரவு செய்தால் இவனுக்குக் கோபம் வரும் என்று சாரதாவுக்கும் தெரியும்தான். ஆனால் இப்படிக் கத்துவான் என்பதை நிச்சயமாக அவள் எதிர் பார்க்கவில்லை. ஏன், இவனுக்கே இப்போது மறுபடியும் நினைத்துப் பார்க்கிற போது 'நாம் தானா அப்படிக் கத்தினோம்?' என்று ஆச்சர்யமாக — ஏன், அவமானமாகக் கூட இருக்கிறது.

டி.வி.யில் பாட்டு முடிந்திருக்க வேண்டும். தியேட்டரில் படம் விட்டதும் கலைகிற மாதிரி ஒரு சின்னக் கூட்டம் சளசளவென்று பேசிக்கொண்டு கலைந்த சத்தம் கேட்டது. எதிர் வீடு, பக்கத்து வீடு, இந்தப் பக்கம், எதிர் வீட்டுக்குப் பின்னால் ஸ்டோர் வீடுகள் — 'இங்கிருந்தெல்லாம் வந்திருப்பார்கள்...!

அறைக்குள் காலடி ஓசை கேட்கிற நிமிடத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்... ஒரு நிமிடம், இரண்டு... ஐந்து...! சாரதா வருவதற்கான அறிகுறியே காணோம். இருப்புக் கொள்ளவில்லை இவனுக்கு. எழுதி முடித்த பேப்பரை எடுத்து ஃபைலில் போட்டு மேலே வைத்து விட்டுக் குறுக்கும் நெடுக்குமாக இரண்டு மூன்று முறை நடந்தான். நேரம் ஓடிக் கொண்டிருந்தது. செய்திகளைக் கூட வாசித்து முடித்து விட்டார்கள் போலிருந்தது. என்ன இன்னும் காணோம்? நிஜமாகவே கோபித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாளா...? இல்லை, டி.வி சுவாரசியமா?"

**கா**ல் கொலுசுகள் சப்தித்தன..... தரி



# ஜீவன்

## கமலாலயன்

கெட்டுப் பாய்ந்து கொண்டிருந்த மன ஓடைக்குக் குறுக்கே களீர் களீர் என்று விழுந்தன கற்கள்...! குபீரென்று தடைப் பட்டு எதிர்ப்பக்கம் திரும்பிய நினைவு வெள்ளத்தில் சாரதாதான் வியாபித்திருந் தாள்...!

''...சாப்புடறீங்களா...?''

முகத்தில் சிரிப்பில்லாமல், விறைப்பான பார்வையுடன், சிநேக பாவமில்லாத குரலில் கேட்டாள் சாரதா.

''ம்....''—இவன் முனகினான். இவனுக்கே கேட்டிருக்காத அந்த முனகல் அவளுக்குக் கேட்காமற் போனதில் ஆச்சரியமில்லை.... மறுபடியும், ''.... சாப்புடறீங்களான்னு கேட் டேன்!'' என்றாள்.

''சாப்புடலாம்னுதான் சொல்றேன்..''



—கொஞ்சம் சத்தமாகச் சொல்லி விட்டு இவன் கைகழுவப் போனான். வந்து உட் கார்ந்ததும் சாப்பாட்டுத் தட்டு 'ணங்'கென்று இவன் முன்னால் வந்து விழுந்து அதிர்வை நிறுத்தியது. சாரதா மௌனமாகச் சாப்பாடு போட்டாள். சாம்பாரை ஊற்றினாள். பொரியலை எடுத்து வைத்தாள். சாப்பிட ஆரம்பித்த சிறிது நேரம் கழித்து, மறந்து போன தண்ணீர் டம்ளர் — நீர் தளும்பிச் சிதற வைக்கப்பட்டது.

நடுநடுவே இவன் எதையாவது வேண்டு மென்று கேட்டு ஏதாவது பதிலை வாங்க முயன்றான். இவன் கேட்க வாயெடுக்கும் முன்பே அவளாக முந்திக் கொண்டு அதனை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். இவனுக்குச் சாப்பாடே இறங்கவில்லை. அவளுடைய மௌனம் இவனுக்குச் சித்திர வதையாக இருந்தது.

''என்ன, உம்முன்னு இருக்கே...? சத்தம் போட்டேன்னு கோவமா?''

—பொறுக்க முடியாமல் இவனாக ஆரம் பித்தான். பதிலே இல்லை. இவன் சாப் பிட்டு முடிக்கிற வரை எதிரே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்ததோடு சரி; இவனுக்கு மறுபடியும் ஓர் அவமான உணர்ச்சிதான் எழுந்தது.

சாப்பிட்டு முடித்து உள்ளறைக்கு வந்த தும், ''பசங்களை எங்கே காணோம்?'' என்று அடுத்த அஸ்திரத்தைத் தொடுத்தான். அவன் கேட்டதும், தானுமாய்த் தயாராக எதிர் கொண்டாள்.....

''எல்லாம் இங்கேதான் இருக்கு... டி.வி. பாக்குதுங்க. ரொம்பத்தான் அக்கறை பசங்க மேலே....!''

—இவன் எய்த அஸ்திரம், பலவீனப்பட்டுப் பொடிப்பொடியாக உதிர்ந்ததாக உணர்ந் தான்.

''இப்ப எதுக்கு இப்படி மொறச்சுக் கிட்டுத் திரியறே நீ? கோவத்துல ஏதோ சொல்லிட்டேன். என்னமோ ஒரேயடியா மொகத்தைத் தூக்கி வச்சுக்கிட்டு நிக் கிறியே...!''

— நெருக்கு நேர் வாளும், கையுமாக மோதத் தொடங்கியாயிற்று! தீப்பொறி பறந்தது அவள் முகத்தில்....

''...யார் மொறைக்கிறாங்க....? இல்லே, யாரு மூஞ்சியைத் தூக்கிக்கிட்டுத் திரியிறாங் கன்னு கேக்கறேன்....? பேசாம உங்க வேலையைப் பாருங்க.... அதான்.... மேலே

அடுக்கியிருக்கே புத்தகம்.... அதுல ஏதாச்சும் எடுத்து வச்சுட்டுப் படிங்க... இல்ல... எழுதுங்க..... இது ரெண்டு இருந்தாப் போதுமே... வேறே — பொண்டாட்டி — புள்ளே நெனப்பு எதுக்கு? அதுங்க கூடப் பேசறது எதுக்கு.....?''

— இவன், எதிரே மின்னற் சுழற்சியாய் வந்த அவளின் வாள் வீச்சை எதிர் கொள்ள முடியாமல் திணறிப் போனான். கையில் இருந்த வாளைத் தற்காப்புக்காகக் கூடப் பயன்படுத்த முடியாமல் கை சோர்ந்ததாக உணர்ந்தான். சரணடைவதற்கான வெள்ளைக் கொடி உயர்த்துவதே உத்தமம்..!

''...சரி, இதோ பாரு சாரதா... போன மாசம் ஊருக்குப் போயிட்டு வந்தப்ப — பூசாரிபட்டி பஸ் ஸ்டாண்டுல ஒரு சின்ன சம்பவத்தைப் பார்த்தேனா... அதை வச்சு ஒரு கதையை மும்முரமா எழுதிக்கிட்டிருந்தேன்... நீ அந்த நேரம் பார்த்து விடாமல் தொண தொணத்தியா.... கோவம் வந்திருச்சு.... சரி, அதையே பேசிட்டிருந்தா எப்படி...?''

— அவள் மௌனமாக நின்றாள். இரத்தம் முகத்துக்கு ஏறிச் சிவந்து கிடந்தது. மேற்கொண்டு என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்று புரியாமல் நின்றான் இவன். சாரதா மறுபடியும் வெளியே போய் விட்டாள்.

ஆயாசத்துடன், பனியனைக் கழற்றிக் கொடியில் போட்டு விட்டுப் படுக்கையில் சாய்ந்தான்...! மன உளைச்சலில் கண்களை மூட முடியவில்லை...! வில்லம்புப் படுக்கையில் என்றோ ஒரு பீஷ்மர்...! சொல்லம்புப் படுக்கையில் எத்தனை பீஷ்மர்கள்!

மனத்தில், இதே மாதிரி நடந்த வேறு சில வாக்குவாதங்கள் விசுவரூபமெடுத்து வந்து நின்று குதியாட்டம் போட்டன. புத்தகம் படித்துக் கொண்டிருக்கும் போது, ரேடியோவில் மெலிதாய் அந்த நாதஸ்வரத்தின் ஸ்வரப்பிரஸ்தாரங்களில் மனம் லயித்திருக்கும் போது, எதையாவது உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் எழுதிக் கொண்டிருக்கும் போது... அவள் ஏதாவது கேட்க முயன்ற போதெல்லாம் இப்படித்தான் கத்தியிருப்பானோ? அவன் ஞாபகத்திலேயே இல்லை. ஞாபகத்தில் இருக்கிறது — சிலது — இன்றைக்குப் போலத்தான்.... காட்டுக் கூச்சல்கள்....

**உ**டல் அசதியும் மன உளைச்சலுமாய் எப்போது தூங்கினானோ தெரியாது. நடுவே எதோ ஒரு நேரத்தில் திடுமென்று விழிப்பு வந்து பார்த்தால் — முழங்கால்களைக் கட்டிக் கொண்டு, தலையை முழந்தாளின் மீது சாய்த்தபடி — இவனையே வெறித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் சாரதா. திறந்திருந்த ஜன்னலின், வழியே தெருவின் ட்யூப்லைட் வெளிச்சம் வெண்படலமாய்ப் படிந்திருந்தது அறைக்குள். கனவு காண்கிறோமா என்ன? என்றே புரியாமல் தடுமாறிய பின்தான் இவன் தன் னுணர்வுக்கே வந்தான்.

''...என்னடா இது? இன்னுமா தூங்கல நீ? என்னது இது...?'' என்றான் பதற்றத்துடன். நீண்ட மை தீட்டின கரிய விழிகள் கலங்கி நீர் கோத்திருப்பது தெரிந்தது. முதுகு குலுங்கித் தணிவதிலிருந்து சற்று முன்வரை அழுதிருப்பாள் என்பது தெரிந்தது. பதற்றத்துடன் மறுபடியும் இவன், ''சாரதா, என்னடா இது? இன்னமா கோவம் தீரலே...? சேச்சே... சின்னப் புள்ளையா, நீ...?'' என்று அவள் தோள்களைப் பற்றி அருகே இழுத்தான். இவன் கைகளை உதறி விட்டு நிமிர்ந்தாள் அவள்...

''பகல் பூரா வேலைக்குப் போயிடறீங்க...

---

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம் மாணவர் கட்டுரைப் போட்டி**

பரீட்சை முறைகளில் மாற்றங்கள் செய்யப்பட வேண்டும் என்று கல்வியாளர்கள் கூறிக் கொண்டிருக்கின்றனர். நேரடியாகச் சம்பந்தப்பட்டிருக்கும் மாணவர்களாகிய உங்கள் கருத்து என்ன? இன்றைய பரீட்சை முறை சரியா? சரியில்லை என்றால் எத்தகைய மாற்றங்களைச் செய்ய வேண்டும் என்று கருதுகிறீர்கள்? கல்லூரி விலாசம் குறிப்பிட்டு ஒரு பக்கக் கட்டுரை எழுதி அனுப்பக் கடைசித் தேதி: 24.11.90.

ரூ. 50 முதல் பரிசு பெறும் கட்டுரை தவிர, பிரசுரமாகும் சிந்தனைச் சிதறல்களுக்கும் ஆறுதல் பரிசுகள் உண்டு. அதிகபட்ச முதல் பரிசுகள் பெறும் மாணவர் பொன்விழா மேடையில் ரூ. 2500 சிறப்புப் பரிசு வழங்கிக் கௌரவிக்கப்படுவார்.

50

## பரீட்சை முறையில் மாற்றங்கள் தேவையா?

# என் தாத்தா – இந்த வயதிலும் என்ன துடிப்பு !

தாத்தாவுக்கு வயதாகிக் கொண்டே போகிறது. உடம்போட செயலாற்றல் குறைந்து கொண்டே வருகிறது. அவர் இப்போது குறைவாகச் சாப்பிடுகிறார்.

**அவர் தனது ஊட்டச்சத்துக்களை காம்ப்ளான் மூலம் நிறைவு செய்கிறார்.**

எளிதாக ஜீரணிக்கக்கூடிய காம்ப்ளான், உங்கள் உடலுக்குத் தேவையான 23 ஊட்டச் சத்துணவுகளைக் கொண்டதாகும். தேய்ந்த உடல் திசுக்களைப் புதுப்பிப்பதற்கான பால் புரதம், சக்தி பெறுவதற்கான கார்போஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச் சத்து, உடல் நலத்திற்கான வைட்டமின் மற்றும் தாதுக்கள் ஆகியவற்றைக் கொண்டதாகும் காம்ப்ளான்.




**23**

மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

## காம்ப்ளான்®

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/47/213/TML

வீட்டுக்குள்ளே வந்து உட்கார்ந்த உடனே காப்பியைக் குடிச்சுட்டுப் புஸ்தகத்தை ஏதாச்சும் ஒன்றை எடுத்து வெச்சுக்கிறீங்க. இல்ல, ஏதோ எழுதறீங்க... ஏதாவது கேட்கணும்னாக் கூட பயமாயிருக்கு.... தூக்கம் வந்திச்சுன்னா தூங்கிருவீங்க.. எப்பத்தா நா ஒங்ககிட்ட பேசறது, சொல்லுங்க? புள்ளைங்க கிட்டயோ, எங்கிட்டயோ ஏதாச்சும் பேசணும்னு தோணவே தோணாதா, ஒங்களுக்கு?''

''படிங்க... எழுதுங்க... வேணாம்னு சொல்லலை. ஒங்களை... ஒங்களை மட்டுமே நம்பி ஒரு மனுஷ ஜீவன் நடமாடுது இந்த வீட்ல... அதையும் கொஞ்சம் நெனப்புல வச்சுக்குங்க... நா வேற ஒண்ணும் கேக்கல...''

அழுகை அவள் தொண்டையை அடைத்தது. குரல் தடுமாறியது; தழுதழுத்தது.

''இப்ப நா கொஞ்ச நேரம் பேசாம உம்முன்னு இருந்த உடனே எப்படித் தவிச்சுப் போயிட்டீங்க? எனக்கும்தா நாள் பூரா வேலையிருக்கு. வேலை செஞ்சுக்கிட்டு — புள்ளைகளோடவும் படற டென்ஷனல.. நீங்க என்கிட்ட ஏதாச்சும் கேட்டு.... அப்படி நீங்க கேக்கிறதுக்கு எரிச்சல் பட்டுட்டுக் கத்தினா... அது நியாயம்னு நீங்கள்ளாம் ஒத்துக்குவீங்களா ...? அப்பவும் அதுக்கும் கோவம்தான் வரும் ஒங்களுக்கு..!''

— ரமணன் மலைத்து உட்கார்ந்திருந்தான். பதிலெதுவும் பேசத் தோன்றவில்லை. சொல்வதற்குச் சரியான பதில் எதுவும் அவனிடத்தில் அப்போது இல்லை என்பதுதான் உண்மை.

சாரதா நீண்ட மௌனம் சாதித்தாள். இவனையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிசிறில்லாத, தெளிவான, அழுத்தமான குரலில் கேட்டாள்.

''நீங்க தூங்கினப்புறம், இன்னிக்கு நீங்க எழுதின கதையைப் படிச்சுட்டேன். ரொம்ப நல்லாத்தான் எழுதியிருக்கீங்க... எங்கேயோ, ஏதோ ஓர் ஊர்ல பஸ்ஸ்டாப்புல பார்த்த பெண்ணோட கஷ்டம் கூட ஒங்களை இவ்வளவு பாதிக்குது... இங்க வீட்டில் — ஒங்க கண் முன்னால் ஓழண்டுகிட்டிருக்கிறவளோட உணர்ச்சியை மட்டும் புரிஞ்சுக்க முடியலியாக்கும்? ஏதாச்சும் கேட்டால், பதில் சொல்றதுக்குக் கூட முடியாம, கோவம் வருது...! ம்......?''

— அழுத்தம் நிறைந்த அந்த 'ம்' மில் எத்தனையோ கேள்விகள் நிரம்பித் ததும்பின. அதற்குப் பிறகு அவளும் பேசவில்லை. ரமணனுக்கும் பேச எதுவும் கிடைக்கவில்லை!

# எம்.எல்.வி: நல்லிதயம் கொண்ட நட்சத்திரப் பாடகர்

**எம். எல். வசந்தகுமாரி கர்நாடக இசையுலகின் நட்சத்திரப் பாடகர் என்பதை எல்லோரும் அறிவோம். அவருடைய எளிமையான நல்லியல்புகளை வெளிப்படுத்தும் சில சம்பவங்களை இங்கே நினைவுகூர்கிறார் பல வருஷங்களாக அவர் கச்சேரிகளில் வயலின் வாசித்து வரும் கன்னியாகுமரி:**

**அ**க்காவுக்கு ஒரு கல்யாணக் கச்சேரியில் முதன் முதலாகப் பக்கவாத்தியம் வாசித்தேன். அதற்குப் பிறகு எங்களுக்குள் அதிகம் தொடர்பு இல்லை. என் குருநாதர் சந்திரசேகரனிடம் வயலின் பாடத்தை முடித்துக் கொண்டு வீடு திரும்புகையில் தினமும் ராணி அண்ணாதுரை தெருவிலுள்ள அக்கா வீட்டைக் கடந்துதான் வருவேன். அப்போதெல்லாம் அவர் வாசலில் தென்படமாட்டாரா என்று ஆவலுடன் தேடுவேன். இப்படியே பல மாதங்கள் கழிந்த பின் ஒரு நாள் துணிந்து அவர் வீட்டுக்குள் நுழைந்து விட்டேன். அக்கா சாப்பிட்டு விட்டு வெற்றிலை போட்டுக் கொண்டு விச்ராந்தியாக இருந்தார். என்னைக் கண்டதும் ஐந்தாறு தேதிகளைக் குறிப்பிட்டு—'இந்தத் தேதிகளில் நீ ஃப்ரீயா?' என்று கேட்டார். என்ன நடக்கிறது என்று புரிவதற்குள் என்னை நான்கைந்து கச்சேரிகளுக்குப் பக்கவாத்யம் வாசிக்க ஒப்பந்தம் செய்து விட்டார்.

இசை உலகில் அப்போதுதான் அடியெடுத்து வைத்திருந்த என்னைத் தாயைப் போல் அரவணைத்து வளரச் செய்தார். கச்சேரியில் எந்தெந்த இடத்தில் எப்படி எப்படி வாசிக்க வேண்டும் என்று சொல்லித் தந்து என்னை உருவாக்கினார்.

என்னைப் போலவே எத்தனையோ இளம் கலைஞர்கள் எம். எல். வி. அக்காவால் வளர்ந்து, பெயர் அடைந்திருக்கிறார்கள். இதற்குக் காரணம், அவர்களுடைய திறமையறிந்து, அக்கா அனுசரணையான வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தந்ததுதான். கச்சேரியில் பின்பாட்டுப் பாடும் சிஷ்யையின் திறமையை வெளிப்படுத்தும் வகையில் நிகழ்ச்சியில் சில உருப்படிகளைச் சேர்த்துக் கொள்வார். சாரு பல்லவி பாடுவதில் கெட்டிக்காரி என்று அவளுக்குத் திரிகாலம் பாட வாய்ப்புத் தருவார். சுதாவுக்காகவே 'சஞ்ரதர' என்ற அஷ்டபதியைப் பாடுவார். அந்தப் பாட்டு சுதாவின் சன்னமான குரலில் எடுப்பாய் இருக்கும் என்று தெரியும். அதற்காகச் சில வரிகளில் தான் அடக்கிப் பாடி சுதாவின் குரல் நன்கு கேட்கும்படிச் செய்வார்.

இத்தகைய ஆத்மார்த்தமான நல்லெண்ணம், பெருந்தன்மை, அக்காவுக்குத் தம் சிஷ்யர்கள், சகாக்களிடம் மட்டும் இருக்கவில்லை. எல்லாக் கலைஞர்களிடமும் இருந்தது. வெளியூர்களுக்கோ வெளிநாடுகளுக்கோ கச்சேரிகளுக்குப் போகும் போதெல்லாம் வேதவல்லி, மணி கிருஷ்ணஸ்வாமி, சரோஜா – லலிதா போன்ற கலைஞர்களின் திறமைகளை எடுத்துச் சொல்லி அவர்களுக்குக் கச்சேரி வாய்ப்புத் தரச் சொல்லுவார்.

**அ**க்காவுக்கு ரொம்ப இளகின மனசு. தங்கவேலு என்ற டாக்ஸி டிரைவர் வீட்டுக் கல்யாணத்துக்குக் கையிலிருந்த பணத்தையெல்லாம் கொடுத்து உதவினார்.

அக்கா கையில் பணம் தங்குவதே அபூர்வம். கச்சேரியின் போது சிஷ்யர்களுக்கோ பக்கவாத்தியக்காரர்களுக்கோ போதுமான சன்மானம் தரப்படவில்லை என்று கருதினால் தம் கையை விட்டுப் பணம் கொடுத்து விடுவார். வெளிநாட்டுப் பயணம் சென்றால் எங்கள் எல்லோருக்கும் தனித் தனியே கைச் செலவுக்கு அந்த ஊர்ப் பணம் கொடுப்பார். திரும்பி வரும் போது எல்லோரும் சாமான்கள் வாங்கி 'எக்ஸஸ் பாகேஜ்' ஆகி விடும். அதற்கான அபராதத் தொகையையும் தாமே கட்டி விடுவார்!

**ஒ**வ்வொரு வருஷமும் என் பிறந்த நாளன்று தவறாமல் புதுப் புடவை வாங்கித் தருவார். எத்தனையோ முறை என் சௌகரியம் கருதித் தமது கச்சேரித் தேதிகளை மாற்றிக் கொண்டிருக்கிறார். தம்



காரணமாக வேறு கச்சேரி வாய்ப்புக்கள் எனக்குக் கிடைக்காமல் போய் விடக் கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருப்பார். ஒருமுறை என் சகோதரியின் மகளுக்குத் திடீரென்று அப்பண்டிசைடிஸ் ஆபரேஷன் செய்ய வேண்டியதாகி விட்டது. எம். எல். வி. அக்காதான் ஆஸ்பத்திரியில் சேர்க்க உதவினார். அந்தச் சமயத்தில் நான் வாசிக்க இருந்த வெளியூர் கச்சேரியை ரத்து செய்து விட்டேன். இது தெரிந்ததும் அக்கா என்னை ஏகமாகக் கடிந்து கொண்டு, 'நான் குழந்தையைப் பார்த்துக்கறேன்; நீ கச்சேரி வாசித்து விட்டு வா' என்று என்னை ஊருக்கு அனுப்பி விட்டுத் தாமே இரவு பகலாக ஆஸ்பத்திரியில் தங்கிக் கவனித்துக் கொண்டார். கொஞ்சம் பழகி விட்டால் தமது குடும்ப உறுப்பினரைப் போலவே நம்மைக் கருதி நடத்துவார்.

கடந்த சில மாதங்களாகவே அக்காவுக்கு உடம்பு முடியாமல்தானிருந்தது. அக்கா வீட்டில் படுத்திருந்த காலத்தில் நாங்கள் அவ்வப்போது சென்று பாடச் சொல்லிக் கேட்டுத் தெம்பு அளிக்க முயன்று பார்ப்போம். அத்தகைய ஒரு தருணத்தில் அவரது பழைய சினிமா பாட்டுக்களைக் கற்றுக் கொள்ள எனக்கு ஆசை என்று சொன்ன போது 'எல்லாம் இன்ப மயம்' என்று பாடி எங்களை ஒரேயடியாக நெகிழச் செய்து விட்டார்.

இறுதிக் காலம் நெருங்கி விட்டது என்பதை அவர் உணர்ந்திருந்தார். கச்சேரிகளுக்குப் பயன்படுத்திய தமது சுருதிப் பெட்டியை அவர் எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்த போது, 'நீங்கள் உடம்பு குணமாகிப் பாடுவீர்கள். இது உங்களிடமே இருக்கட்டும்' என்றேன். அவர் மென்மையாகச் சிரித்தபடி 'உனக்குக் கொடுக்க என்னிடம் வேறொன்றும் இல்லை. இதை வைத்துக்கொள்' என்று கூறி விட்டார்.

அக்காவைக் குழந்தை போல் உற்சாகப்படுத்தியவை புதுப் புடைவைகள்தான். 'பிங்க்' வர்ணம் மிகவும் பிடிக்கும். ஆந்திர ரகப் புடைவைகளான கத்வால், வேங்கடகிரி, போச்சம்பள்ளி அவருக்குக் கொள்ளைப் பிரியம். ''தீபாவளிக்குக் 'கத்வால்' புடைவை வேண்டும்'' என்று மகள் வித்யாவிடம் சொல்ல, அவர் பிங்க் வண்ண கத்வால் புடைவை வாங்கி வைத்திருந்தார். தீபாவளியன்று அக்கா அதை உடுத்திக் கொள்ளவில்லை. அவருக்கு இறுதி மரியாதை செய்த போது போர்த்தவே அப்புடைவை பயன்பட்டது.

தொகுப்பு: **எஸ். ஆர்.**

---

**டாக்டர் பதில்கள்:**

# எக்ஸ்ரேயால் ஆபத்து உண்டா?

● **எம். கோபால்சாமி, கோவை — 5**

**ஒருவர் பல தடவை எக்ஸ்-ரே எடுத்துக் கொண்டால், அது அவரது உடம்பைப் பாதிக்குமா?**

● **டாக்டர் ருக்மணி சௌரிராஜன்:**

ஒருவருக்கு உடம்பின் ஒரு குறிப்பிட்ட பகுதியினை எக்ஸ்-ரே எடுக்க வேண்டுமெனில், அந்தக் குறிப்பிட்ட பகுதியில் மட்டுமே எக்ஸ்-ரே கதிர்கள் பாயும்படி செய்வார்கள். இவ்வாறு செலுத்தப்படும் கதிர்கள் மிகக் குறைவு என்பதால் அதனால் எந்தவித ஆபத்தான பின் விளைவுகளும் ஏற்படாது. ஆனால் கர்ப்பிணிப் பெண்கள், எக்ஸ்-ரே விஷயத்தில் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். காரணம் நான்கு மாதங்கள் முடியும் வரை, எக்ஸ்-ரே எடுத்தால் அது வயிற்றில் உள்ள குழந்தையைப் பாதிக்கும். எனவே, கர்ப்பிணிப் பெண்கள் டாக்டரிடம் வேறு ஏதாவது சிகிச்சைக்காகப் போகும் போது கூட கருவுற்றிருக்கும் விஷயத்தைச் சொன்னால், டாக்டரே எக்ஸ-ரே எடுப்பதைத் தவிர்த்து விடுவார். முதல் மூன்று நான்கு மாதங்கள்தான் குழந்தையின் உறுப்புக்களும், எலும்புகளும் முழுமையான உருவமாய் அமையும் காலம். இந்தக் காலத்தில் எக்ஸ்-ரே தவிர்க்கப்பட வேண்டும். மற்றபடி, அவசியமான சோதனைகளுக்கு எக்ஸ்-ரே எடுத்தால் உடம்புக்கு ஆபத்து ஏதும் வராது. பயப்படத் தேவையில்லை.

தொகுப்பு: **மௌஷ்மி.**



# 'பந்த்' நடத்திட வேண்டியதுதான்!

சிரிக்க வையுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!




● தீபாவளிக்குச் சுமார் ஒரு வாரம் முன்பு, உதவித் தலைமை ஆசிரியர் பள்ளிக்கூடத்தில் மாணவர்களிடம் பொதுத் தேர்வுக் கட்டணம் ரூ. 50 என்று கூறிவிட்டு மேலும் சில கட்டணங்களைச் சொல்லி மொத்தம் 100 ரூபாயாக அறிவித்தார். பிறகு "சந்தேகம் ஏதாவது உண்டா?" எனக் கேட்டார்.

பளிச்சென்று வந்தது கேள்வி: "தீபாவளித் தள்ளுபடி இல்லையா, சார்?" என்று!

— வே. முத்துக்குமார், பொள்ளாச்சி—2.

---

● எனக்கும் என் மனைவிக்கும் சிறு வாக்குவாதம். அப்பொழுது என் ஆறு வயதுப் பையன் என் மனைவியிடம் ஏதோ கேட்டுக் கொண்டு வந்தான். நான் உடனே, "அம்மாவிடம் இப்போ எதுவும் கேட்காதே. ரொம்ப சூடா இருக்கா" என்றேன். அதற்கு அவன், "அம்மாவை 'ஃப்ரிட்ஜில்' வைக்க வேண்டியதுதானே?" என்று கூற, என் மனைவி உண்மையிலேயே 'கூலாகி' விட்டாள்!

— ஆர். காசிராமன், சோம்பூர்.




● எனது நண்பர்களுடன் 3A பஸ்ஸில் கல்லூரியை நோக்கிச் சென்று கொண்டிருந்தேன். வழியில் ஆர்ட்ஸ் காலேஜ் ஸ்டாப்பில் பஸ் நிற்க, அழகான கல்லூரி மாணவி பஸ்ஸில் ஏறினாள். அவளைக் கண்டதும் லேடீஸ் சீட்டில் அமர்ந்திருந்த என் நண்பன் எழுந்து நின்று, "டேக் யுவர் சீட்" என்றான்.

உடனே அவள், "இதே ஒரு கிழவியா இருந்தா இடம் கொடுத்திருப்பீங்களா?" என்று கேட்க, அவன் சற்றும் சளைக்காமல், "நீங்க அப்படி இருப்பதனால தான் உங்களுக்கு இடம் கொடுத்தேன்" என்றானே பார்க்கலாம்!

— தக்கோலம் புகாரி, சென்னை—13.

---



"டாக்டர்..., உடம்பு இளைக்க ஒரு வழி சொல்லுங்களேன்..."

"ஒரு மாசம் உங்க வீட்டுக்காரருக்கு ரெஸ்ட் கொடுத்துட்டு நீங்க வீட்டு வேலைகளையெல்லாம் செஞ்சு பாருங்களேன்...!"

— வி. கிருஷ்ணகுமார், சென்னை — 73.

---

● நானும் நண்பரும் பேசிக் கொண்டிருக்கும் போது நண்பரின் பையன் வந்தான். "அப்பா, காணாமல் போன உங்கள் பேனாவைக் கொஞ்ச நேரத்திற்கு முன்பு கண்டுபிடிச்சேன். ஆனா மறுபடியும் தொலைஞ்சிட்டது" என்றான். உடனே நண்பரும், "சரி, சரி... மறுபடியும் கண்டுபிடிச்சுத் தொலை...!" என்றார்.

— எஸ். யோகலிங்கம், சென்னை — 82.



● பேராசிரியர் தமது விரிவுரையின் மத்தியில், 'Old wine in new bottle' என்று ஒரு விஷயத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். அதாவது 'புதிய மொந்தையில் பழைய கள்' என்று சொல்லிவிட்டு இந்த வாசகத்தை வேறு எவ்வாறு குறிப்பிடலாம் என்று மாணவர்களையே கேட்டார்.

ஒரு மாணவன் நறுக்கென்று சொன்னது: 'Old master in new coat' வகுப்பறையே சிரிப்பில் மிதந்தது. காரணம், பல மாதங்களாக ஒரே கோட்டை அணிந்து வந்த அப்பேராசிரியர் அன்றுதான் புதிய கோட்டு ஒன்றை அணிந்து வந்திருந்தார்!

— பெ. க. சங்கரன், சென்னை — 5.

---

''அடுத்த புதன்கிழமை இங்கிலிஷ் டெஸ்ட்... ஒண்ணுமே படிக்கலே!''

''அதுக்கு என்ன பண்ணப் போறே?''

''யாராவது அரசியல் தலைவரைப் பார்த்து, அன்னிக்கு 'பந்த்' நடத்திட வேண்டியதுதான்!''

— விஜயம், கோவை.

---

● தமிழ்ப் பேராசிரியர் வகுப்பில் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். எல்லோர் கவனமும் புத்தகத்திலும், அவரது உரையிலும் இருந்தது. ஒரு மாணவன் கவனிக்காமல் தூங்கி வழிந்து கொண்டு இருந்தான். பேராசிரியர் 'பார்த்தசாரதி' என்று பெயர் சொல்லி அழைத்தவுடன், திடுக்கிட்டு எழுந்தான். பேராசிரியர், 'பார்த்தசாரதி, புத்தகத்தைப் பார்க்காத சாரதி' என்று சொன்னவுடன் அவனும் என்னவென்று புரியாமல் 'ஆம், ஐயா!' என்று சொல்ல, வகுப்பே சிரிப்பில் அதிர்ந்தது!

— 'இளவல்' ஹரிஹரன், மதுரை — 1.

● மாணவிகள் படிப்பில் கெட்டிக்காரர்கள் என்பதற்குச் சிற்சபேசன் ஒரு பட்டி மண்டபத்தில் கூறியது:

ஆசிரியர்: (மாணவியைப் பார்த்து) ''கணக்கில் எவ்வளவு மார்க்?''

மாணவி: ''95 சதவிகிதம் சார்.''

ஆசிரியர்: ''5 மார்க் என்ன ஆச்சு?''

பக்கத்து மாணவன்: ''என்னிடம் இருக்கிறது சார்!''

— அ. ஷண்முகசுந்தரம், சென்னை — 64.

---

● குற்றாலத்திற்குச் சிநேகிதியுடன் காரில் சென்ற போது, கார் வெளியூரில் ரிப்பேர். ஒர்க் ஷாப்பிற்குத் தள்ளிக் கொண்டு போனோம். சிநேகிதி தன் கணவரிடம்: ''இந்தக் காரை விற்றவர் சொன்னது சரிதான். பெட்ரோல் ரொம்பக் குறைவாகத்தான் இதற்குச் செலவாகும்!''

— எம். பிரேமா, கன்னியாகுமரி.

---



அடுத்த இதழில்...

●● நாட்டின் எதிர்காலம் ராஜீவ் கையில்......

— கவர் ஸ்டோரி



# மல்லு வேட்டி மைனர்

இடத்துக்கு ஒரு நாயகி.
அவனுக்கு இதமான ஒரு வாழ்க்கை.
இத்தகைய ஒரு நெறியைக்
கடைப்பிடித்து வாழ்ந்து விட்ட
அப்பாவுக்குத் தப்பாமல் பிறந்து
விட்ட சத்யராஜ் அதே அடிச்
சுவட்டில்.

பறந்து திரியும் அவர் பார்வை
சோபனாவின் மீது பட,
அவரைப் பற்றிய ஒரு பிரமை
சோபனாவிடம் உள்ளுக்குள் ஒளிந்
திருந்தாலும் அதை மறைத்துப்
புறத்தே ஒரு சவாலாக விளங்க...
அதன் காரணமாகவே சோபனாவை
வளைத்துப் போட அவர் மேற்
கொள்ளும் அகட விகட முயற்சிகள்
என்ன... அதற்காகவே ஒரு போட்டி
யில் ஈடுபட்டு வென்று அவரை
மணப்பெண்ணாகத் தேர்ந்தெடுக்க
முனைவது என்ன...

சந்தர்ப்பச் சூழ்நிலைகள் எதிரா
கப் போய், சீதாவை மணந்து
கொள்ள நேர்ந்து விட, சோபனா
வின் கோபமும் ஊர்ப் பஞ்சாயத்
துத் தலைவரின் விரோதமும் ஒன்று
சேர — உலக இன்பங்களில் ஊறித்
திளைத்து, அதுவே நிரந்தரம் என்கிற
மனநிலையிலிருந்து மாறி வாழ்க்கை
யின் நிதரிசன உண்மைகளைச்
சத்யராஜ் சந்திக்க நேரும் போது,
அந்த மாற்றத்துக்குத் தன்னை உள்
ளாக்கிக் கொள்ளும் விதம் இதம்.

பெண் சபலக்காரர் சம்பந்தப்
பட்ட இத்தகைய ஒரு கதையை
ஆபாசத்துக்கு ஒரு வாகனமாக்கி
விடவில்லை மைனரின் திரைக்
கதை வசனகர்த்தா. மாறாக, சுவை
யான கதையோட்டம், மண்வாசனை
வீசும் வலுவான வசனங்கள்,
உள்ளர்த்தம் தெரிந்தாலும் விரசம்
தவிர்த்திருப்பது ஆறுதல்.

படத்துக்குப் பக்க வலுவாக விளங்கு
பவை: பொருத்தமான பாத்திரத்
தில் சோபனா, முதிர்ச்சியான
நடிப்பில் சீதா, இனிமையாக விளங்
கும் பாடல்கள்.

சத்யராஜ் சந்தானராஜ்.

— சி. ஆர். கே.




## COUNT DOWN — 8

# டெலிபோனில் ஒலித்த கீதம்!

அந்த ஐந்து பெயர்களில் செல்வமணி யார் என்பது இப்போது மணிமாறனுக்குப் புரிந்து விட்டது.

லக்ஷ்மி — ரூபா.

லக்ஷ்மி என்றால் செல்வம்.

ரூபா என்றால் பணம். ஆங்கிலத்தில் **Money**.

செல்வமணி.

மணிமாறன் அவசரமாகச் சட்டை யணிந்து லாட்ஜ் ரூமிலிருந்து வெளிப்பட்டான்.

"குட் ஈவினிங் கர்னல்!'' — அச்சுதன் டெலிபோனில் தன் மரியாதையின் விறைப்பைக் கூடிய அளவு குரலில் சேர்த்துக் கொண்டான்.

''குட் ஈவினிங்'' டில்லியிலிருந்து கர்னலின் குரல், பக்கத்து அறையிலிருந்து வருவது போலத் தெளிவாக உற்சாகமாக இருந்தது.

''நம் ஆள் சென்னைக்கு வந்து விட்டான், கர்னல்.''

''அப்—படி—யா?''

''அவனை நூலிழையில் தவற விட்டு விட்டேன்...'' அச்சுதன் மன்னிப்புக் கோரும் குரலில் சொன்னான். ''ஆனால் அவனைக் கண்டுபிடித்து விடுவேன் எப்படியும்!''

''செல்வமணி என்று யாரும் நம் ரெக்கார்டுகளில் இல்லை, அச்சுதன். ஆனால் மெட்ராஸையும், பாகிஸ்தானையும் கனெக்ட் பண்ணும் ஒரு விஷயம் இருக்கிறது.''

அஞ்சனா மைக்கேல்ராஜ்

''ரேடியோ பாகிஸ்தானிற்காக ஒரு கலைக் குழு மெட்ராஸிலிருந்து புறப்படுவதைத்தானே சொல்கிறீர்கள், கர்னல்?''

''எக்ஸாக்ட்லி!''

''மொத்தம் ஐந்து பேர், கர்னல். ஆனால் அந்த லிஸ்ட்டிலும் செல்வமணி என்ற பெயர் இல்லை. லக்ஷ்மி ரூபா என்று ஒரு டான்ஸர் இந்தக் குழுவில் இருக்கிறாள். செல்வ—மணி என்பது அவளைத்தான் குறிக்கிறது என்று நினைக்கிறேன்.

''நெருங்கி விட்டாய்..''

''அவளைச் சந்திக்க மணிமாறன் எப்படியும் வருவான். அவனைச் சந்திக்க நான் தயாராயிருக்கிறேன், கர்னல்.''

''வெரிகுட்.''

''கர்னல்.. அப்புறம்...'' அச்சுதனின் குரல் வெட்கத்தில் தேய்ந்தது.

''அப்புறம் ஒன்றுமில்லை. போனை வைத்து விடு.'' கர்னலின் குரலில் மிக மெலிதான கேலி இருந்தது.

''கர்னல் அதில்லை... நான்...''

''நீ போன் செய்தபோதே நினைத்தேன். இது கர்னலுக்காகச் செய்த போனில்லை. பக்கத்திலேயேதான் டென்ஷனாக நகத்தைக் கடித்துக் கொண்டு நிற்கிறாள்... பேசு.''

அச்சுதன், இதயத்தில் இனிமையாக உணர்ந்தான். ஆவலுடன் காத்திருந்தான்.

''அச்சுதன்!''

சாந்தினியின் குரல். அவனுடைய மலை நாட்டு அருவியின் அருகே கீதமிசைக்கும் சிறு பட்சிகளின் குரல்.

''சாந்தினி... சுகந்தானே?''

''ம். ஆப் கைஸே ஹைய்?''

''உனக்கு வேறு தாய்மொழி, எனக்கு வேறு தாய்மொழி. இருந்தாலும் நாம் நெருங்குவதை நம் பாஷைகளால் தடை பண்ண முடியவில்லை பார்த்தாயா சாந்தினி?''

''நாம் நெருங்கியிருக்கிறோமா அச்சுதன்?''

''மனத்தால் நெருங்கவில்லை...?''

நேரப் பற்றாக்குறையும், இந்த வாய்ப்பு மறுபடியும் கிட்டாதோ என்ற பதற்றமும், யோசிக்க அவகாசமில்லாமல் முடிவு எடுக்க வேண்டிய நெருக்கடியும் வேட்டைக்காரனின் பலவீனங்கள், வேட்டையாடப் படுபவர்களுக்கு அனுகூலங்கள்.

— டான் ஹெப்வொர்த்.

''........''

''ஏய், என்ன பதிலே இல்லை. சொல்லு!''

''நான் இப்போது மிகவும் சந்தோஷமாக உணர்கிறேன் அச்சுதன். மகளைப் போல் பார்த்துக் கொள்ள ஒரு கர்னல்... அப்புறம்...''

''அப்புறம்?''

''நான் சொல்ல மாட்டேன். வெட்கமாய் இருக்கிறது.''

''போனில்தானே பேசுகிறாய். முகத்தைப் பார்த்துப் பேசினால்தானே வெட்கம்..! சொல்லு!''

''என்னால் முடியாதுப்பா...!''

''நான் சொல்லட்டுமா?''

''ம்''

''காதலியைப் போலப் பார்த்துக் கொள்ள ஒரு அச்சுதன்...''

''ச்சீ!''

''சரியா இல்லையா?''

''போல என்று சொன்னது தப்பு!''

''ஸாரி. ஸாரி. போல என்று சொல்லியிருக்கக் கூடாது. வெரி ஸாரி சாந்தினி!''

''ஏய்... என்ன இது இவ்வளவு ஃபீல் பண்ணுகிறீர்கள். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?''

''சந்தோஷமாக... வருத்தமாக...''

''இரண்டுமாகவா?''

''உன் குரலைக் கேட்பதில் சந்தோஷம். உன்னைப் பார்க்க முடியாமல் இருப்பதில் வருத்தம்!''

''நாளைக்கு நாம் எப்படியும் மீட் பண்ணப் போகிறோம், அச்சுதன்...'' சாந்தினியின் குரலில் புது உற்சாகம்.

''என்னது!''

''நாங்கள் மெட்ராஸ் வருகிறோம் அச்சுதன்.''

''ரியல்லி?''

''சத்தியமாகத்தான். இந்த விஷயத்தை நான் சொன்னால் சந்தோஷப்படுவீர்கள் என்றுதான் கர்னல் சொல்லவில்லை.''

''இப்பொழுதே இந்த வீட்டை இன்னும் சுத்தம் பண்ணச் சொல்கிறேன்.''

''குட் நைட் அச்சுதன்.''

''அவ்வளவுதானா?''

''டெலிபோனில் வேறென்ன வேண்டும்?'' — சாந்தினியின் முகம் எதிர்ப்புறம் சிவப்பதை அச்சுதனால் இந்த முனையில் கற்பனை செய்ய முடிந்தது. தொலைவும், முகம் பார்த்துப் பேசும் சங்கடமும் இல்லாத போது, வார்த்தைகளுக்கு வந்து விடும் துணிச்சல் அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

''சொல்லுங்கள், அச்சுதன். வேறென்ன வேண்டும்?''

''நேரில் வா சொல்கிறேன்'' என்றான் அச்சுதன், ரிசீவரை வலிக்காமல் டெலிபோனில் பொருத்திக் கொண்டே.

கர்னல் திடீரென்று மெட்ராஸ் புறப்பட்டு வர வேண்டிய அவசியம் என்ன? மணிமாறனைக் கைப்பற்ற என் ஒருத்தனால் இயலாது என்று நினைத்து விட்டாரா?

அச்சுதனின் சவால் சுரப்பிகள் வேகமாக் வேலை செய்தன. ரத்தத்தில் சூடு பிடித்தது.

இரவு நேரத்தில் காட்டிக் கொடுக்காத சாம்பல் வண்ண உடைகளை அணிந்தான்.

டெலிபோனை உபயோகித்தான்.

''யெஸ்?'' என்றது மறுமுனை.

''அச்சுதன் ஸ்பீக்கிங். எனக்கொரு ஜீப் வேண்டும். ஆர்மியுடையது என்று எந்த வகையிலும் தெரியாத ஜீப்...''

''அனுப்புகிறேன்..''

''இரண்டு நம்பிக்கையான ஆட்களும்..''

''எந்த மாதிரி?''

''அவசியமென்றால் சண்டை போட்டு எதிரியை மடக்கும் துணிச்சலும், ரகசியமாகச் செயல்படக்கூடிய பயிற்சியும் பெற்றவர்களாக...''

''ஜெயதேவ், அண்ட் அழகப்பன். இன்னும் ஐந்து நிமிடங்களில் அங்கே இருப்பார்கள்.''

**ல**க்ஷ்மி ரூபா பஞ்சு கெட்டித்துப் போயிருந்த மெத்தையில் புரண்டாள். சதங்கையை யாரோ தொடர்ந்து ஆட்டுவது அவள் உறக்கத்தைக் கலைத்தது.

எழுந்தாள். கால்களைத் தரையில் இறக்கினாள். விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

சலங்... சலங்..

ச்சே, சதங்கையைக் கூடக் கழற்றாமல் தூங்கிப் போயிருக்கிறேன்.

அறைக்கு வந்தபின் க்ருஷ்ண கானத்தின் ஸ்பெஷல் அயிட்டத்திற்காகப் பயிற்சி

செய்து கொண்டிருந்தது நினைவுக்கு வந்தது. மப்பாய் மீதிருந்த டேப் ரிக்கார்டர், பாட்டு முடிந்து தானாக நின்று போயிருந்தது.

கதவை அனுகித் திறந்தாள்.

வெளியே வராந்தாவில் மெல்லிய வெளிச்சம் தூவிக் கொண்டு நாற்பது வாட் பல்பு காற்றில் தூக்கணாங்குருவிக் கூடாக லேசாக ஆடிக் கொண்டிருந்தது.

''ஏய் லக்ஷ்மி... எத்தனை நேரமாகக் கதவைத் தட்டுவது?''

''என்ன?''

''போன் வந்திருக்கிறது. உனக்கு.''

''இந்த நேரத்தில் யாராயிருக்கும்?

கண்களைக் கசக்கி விட்டு நடந்தாள். வராந்தாவின் இன்னொரு மூலையில் சுவரோடு பதிந்திருந்த தொலைபேசியை நெருங்கினாள்.

''ஹலோ.''

''லக்ஷ்மி ரூபா?''

''ஆமாம், நீங்கள் யார்?''

''என் பெயர் மணிமாறன்.''

லக்ஷ்மி ரூபாவின் உடல் சட்டென விறைத்தது. அவள் மூன்று நாட்களாக எதிர்பார்த்திருந்த குரல்.

''எங்கேயிருக்கிறீர்கள்?''

''இந்த நிமிஷம் உன் ஹாஸ்டலுக்கு நேரெதிரே இருக்கும் டெலிபோன் பூத்தில்.''

லக்ஷ்மி ரூபா தலையை மெல்லத் திருப்பிப் பார்த்தாள். எதிர் ஆஸ்பத்திரியின் வாசலில் இருந்த சிவப்பு டெலிபோன் பூத்தின் கண்ணாடி வழியே நிழலாக ஒருத்தன் தெரிந்தான்.

''நாம் உடனே சந்திக்க வேண்டும்.''

''ஹாஸ்டல் காம்பவுண்டில் பின்புறம் ஓர் அசோகமரம் இருக்கிறதே.. அதற்குக் கீழே சந்திப்போம்.''

''சரி...''

லக்ஷ்மி ரூபா ரிசீவரை வைத்தாள்.

**ஆ**காயத்தின் நீலத்தை மறைத்து மேகங்கள் கறுப்புக் கொடி உயர்த்தியிருந்தன.

காற்று அமைதியாயிருந்தது. அசோக மரத்தின் கீழே லக்ஷ்மி ரூபா நின்றிருந்தாள். அவள் இதயம் பட்டாம்பூச்சியின் சிறகுகளைப் போலத் துடித்துக் கொண்டிருந்தது.

காய்ந்த இலைகளையும் சிறு மணல் துகளையும் அரைபடுக் கொண்டு இரண்டு ஷூக்கள் நடந்து வருவதின் தோல் முனகல். மணிமாறன்!

லக்ஷ்மி ரூபாவின் போட்டோவை ஏற்கெனவே அவன் பத்திரிகை ஆபீஸில் பார்த்திருந்ததால் அவளை உடனே அடையாளம் புரிந்தது.

''என்னை எதிர்பார்த்தாயா?'' என்றான் அவள் அருகே வந்ததும்.

''மூன்று நாட்களாகவே உங்களிடமிருந்து போன் வரும் என்று காத்திருந்

தேன்.'' லக்ஷ்மி ரூபா இருட்டில் மணிமாற னின் முகத்தைச் சரியாகக் கவனிக்க முடியாததற்கு வருந்தினாள்.

''என்னைப் பற்றி உனக்கு?''

''சொல்லப்பட்டிருக்கிறது'' என்றாள்.

''உன்னைப் பற்றி இதற்கு முன் நான் கேள்விப்பட்டதே இல்லை'' என்றான் மணி மாறன். அரை வெளிச்சத்தில் தெரிந்த அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்து.

''குரு சிவகுமார் என்று கேள்விப்பட்டி ருக்கிறீர்களா?''

மணிமாறனின் நினைவு டைரியில் குரு சிவகுமார் என்ற பெயர் உடனே மேல் மட்டத்திற்கு வந்தது. ஜலந்தரில் ஷர்மா போல் திருச்சி பகுதியில் குருசிவகுமார்.

''தெரியும்'' என்றான்.

''அவருடைய முதல் மகள் நான். மெட் ராஸில் மெடிக்கல் காலேஜ் ஸ்டூடண்ட்.''

''பாகிஸ்தானிற்கு என்றைக்குப் புறப்படு கிறீர்கள் எல்லோரும்?''

''நாளன்றைக்கு.. நீங்கள் மிக முக்கிய மான ஒரு பொருளை அங்கே சேர்ப்பிக்க வேண்டும் என்று அப்பா சொன்னார். டான்ஸ் டிராமாவிற்காக நாங்கள் எடுத்துப் போகும் நடராஜர் சிலை என்னிடம்தான் இருக்கிறது. அப்பா சொன்னபடி வாங்கி வைத்திருக்கிறேன்.''

''மெட்டல் சிலையா?''

''இல்லை. பேப்பர் கூழால் செய்தது. இதோ இவ்வளவு உயரம் இருக்கும்.''

''வெரிகுட்... அந்த சிலை எனக்கு வேண் டும். நாளைக்கு நான் திருப்பித் தந்து விடு வேன்.''

''தெரியும்... நீங்கள் பாகிஸ்தானிற்கு அனுப்ப வேண்டியதை அதற்குள் ரகசிய மாக மறைத்து விடுவீர்கள், கரெக்ட்?''

''இவ்வளவு தூரம் நீ யூகிக்க வேண் டாம்.'' மணிமாறன் தன் வசீகரமான புன்ன கையை அணிந்து கொண்டான்.

லக்ஷ்மி ரூபா மரத்தின் பின்னே சென்று திரும்பி வந்தாள். அவள் கையில் பயணத் திற்கு எடுத்துப் போகும் ஜிப் போட்ட பை இருந்தது.

''இந்தப் பைக்குள் நடராஜர் இருக் கிறார்'' என்றாள்.

''விடிவதற்குள் தயார் பண்ணி விடு வேன்'' என்றான் மணிமாறன். ''போன் செய்கிறேன். இதே இடத்தில் சந்திப்போம்.'' சரேலென்று பையை எடுத்துக் கொண் டான். இருளில் கலந்தான்.

**ம**ணிமாறன் காம்பவுண்டு சுவரில் இருந்து லாகவமாக இறங்கியதை அந்தத் தெருவின் முனையில் நின்று கொண்டிருந்த ஜீப்பின் இருட்டிலிருந்து அச்சுதன் பார்த் தான்.

''ஜெயதேவ்... நீ இறங்கிக்கொள். இந்த ஹாஸ்டலில் இருக்கும் லக்ஷ்மி ரூபாவின் ஒவ்வொரு அசைவையும் கவனிக்க வேண்டி யது உன் பொறுப்பு.''

''மணிமாறன் அதோ நடந்துதானே போகிறான். அவனை..''

''நோ. அவசரப்பட்டு ஒருமுறை காரியத் தைக் கெடுத்து விட்டேன். இந்த முறை அவனைத் தொடரப் போகிறேன், ரகசிய மாக.''

மணிமாறன் இருட்டில் நின்ற ஓர் ஆட்டோவில் ஏறிக் கொண்டான்.

ஜெயதேவ் இறங்கினான்.

ஜீப் அந்த ஆட்டோவை இருநூறடி இடை வெளியில் தொடர ஆரம்பித்தது!

(தொடரும்)

**நர்ஸ்: இந்த பேஷண்டுக்கு ஆபரேஷன் பண்ணித்தான் ஆகணும்ங்கிற அவசி யம் என்ன, டாக்டர்...?**

**டாக்டர்: வேற வழியில்லை... கைச்செல வுக்குச் சுத்தமாப் பணம் இல்லே...!**

**— தங்க. நாகேந்திரன்.**





**''எனக்கு ரொம்ப ஞாபக மறதி. சில சமயம் சாப்பிடாமலேயே சாப்பிட்டதா நினைக்கறேன், டாக்டர்!''**

**''அதுக்கென்ன இப்ப?''**

**''நேற்று அந்த ஹோட்டல்ல சாப்பி டாமலேயே சாப்பிட்டதா நினைக்க மாவாட்டிட்டேன், டாக்டர்!''**

**— எஸ். முகம்மது யூசுப்.**

# இந்தியர்கள் சார்பாய் வாசித்த வாழ்த்து மடல்!

* அமைதிவிரும்பி கோர்பச்சேவ், சோவியத் யூனியனின் அதிபராகப் பதவியேற்ற போது இருந்த லோக நிலையையும், இப்போதுள்ள லோக நிலையையும் எடுத்துக் கூறிய ஜெயகாந்தனின் "சமாதான வீருக்கு நோபெல் பரிசு!" அருமை. (Suitable writer for the suitable topic) மிகையில் கோர்பச்சேவுக்குக் கிடைத்த நோபெல் பரிசு 'சத்திய சோதனைக்குக் கிடைத்த விருது.' என்ற வர்ணனை மிகையற்றது.

திருச்சி — 2, கிஷோர்.

* 'சமாதான வீருக்கு நோபெல் பரிசு!' மிகையில் கோர்பச்சேவுக்கு இந்தியர்களின் சார்பாய் வாசித்தளிக்கப்பட்ட வாழ்த்து மடல்!

விண் வரை புகழ் பரப்பும் வீருக்கு மனமுவந்து சொல்லியுள்ள வாழ்த்துப் பத்திரம்!

மதுரை — 1, பிரபாகர் பிரியன்.

* மாதம் ஒரு தொகுதி வரிசையில் சாத்தூர்த் தொகுதி பற்றிய கட்டுரையும் சரி, படங்களும் சரி... மிகச் சிறப்பாக இருந்தன. கட்டுரையின் முடிவு வரிகளில் காரம் சற்று அதிகம்!

திருச்சி, ராஜி ராதா.

* 'காந்திக்கு ஒரு கோவில்' செய்தி படித்தேன். பாராட்ட வேண்டிய விஷயம். இரு தடவை நேரில் சென்று தரிசித்து வந்தேன்.

சைதாப்பேட்டை, ஆர். முரளி.

* 'சித்தி கொடுமை' பற்றி எத்தனையோ சிறுகதைகளைப் படித்திருந்தாலும், பாரதி வீரராகவன் எழுதிய 'வாசல் தேடும் வசந்தங்கள்' மாறுபட்ட படைப்பாகவும், வசந்தா எடுத்த முடிவு புதுமையாகவும், வரவேற்கத்தக்கதாகவும், மகிழ்ச்சிக்கு உரியதாகவும் அமைந்தது. பாராட்டுக்கள்.

தஞ்சாவூர் — 1, ஆர். ராம்சந்தர்.

* 'ஊன்றுகோல்' — ஆகா! எவ்வளவு அருமையான கதை! இவ்வளவு மென்மையாக, சொல்ல வந்ததைத் தெளிவாகவும், மிக அழகாகவும் விளக்கினார் ஆசிரியர். அவரையும், சீதா பாத்திரத்தையும் நம்மால் மறக்கவும் முடியுமோ?

திருவெண்ணெய் நல்லூர், சுஜமுகன்.

* சென்னையில் சில குடிசைப் பகுதிகளில், வீட்டுக்கொரு கழிப்பிடக் கட்டிடம் கட்டிக் கொடுக்கப்பட்ட போது, பள்ளத்தை சிமெண்டால் அடைத்து, மெழுகி, அறைகளாக வாடகைக்கு விட்டு, வழக்கம் போல் திறந்தவெளியையே தங்கள் தேவைக்குப் பயன்படுத்திக் கொண்டார்கள், குடிசைவாசிகள். பம்பாயில் ஷெரீப் நானா திட்டங்களை வெற்றிகரமாகச் செயல்படுத்தியுள்ளார்.

எனவே, இன்று நமக்குத் தேவை திட்டங்கள் மட்டுமல்ல, மக்களை ஈர்த்து நெறிப்படுத்தும் தலைமையும் கூட என்பது புரிகிறது.

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

* நவம்பர் 15இல் நாட்டின் நிலை என்ன? சரியான கணிப்புக்குப் பரிசுப் போட்டி வைத்து வாசகர்களின் அரசியல் அறிவைச் சோதிப்பது நல்லது தான்! அதே சமயம் தேதிக் கெடு வைத்துப் போட்டி எல்லாம் வைக்கிற அளவுக்கு நம் நாட்டின் நிலைமை போய்க் கொண்டிருப்பதை நினைக்கையில் வேதனையும் ஏற்படுகிறது.

திருச்சி — 16, ஞானஸிமந்தன் எஸ். ராஜகோபால்.

* ஜூவி ஜூனியராக 'மைக்கேல், மதன, காம, ராஜன்' படத்தை விமர்சித்தது அருமை. ஆனால் ஒரு சிறு தவறு: கண்டதைத் திருடுவதும், தாவித் தாவிச் சண்டையிடுவதும் ஊர்வசியின் கேரக்டர் அல்ல; ஊர்வசியின் பாட்டி கேரக்டர்!

தஞ்சாவூர், மா. அதிராமவிஜயன்.

* யார் காட்டில் மழையாயிருந்தாலும் வரி, விலைவாசி உயர்வு என்கிற ரூபத்தில் இடி விழுவது மக்களின் தலையில்தானே! கவலைக்குரிய இந்த அம்சங்களைச் சுட்டிக்காட்டியிருந்த தலையங்கம் மக்களின் ஏகோபித்த கவலைக் குரலை எதிரொலிக்கும் வண்ணம் இருந்தது.

கொணவட்டம், கே. ஆர். தேவேந்திரன்.

* ஒரு வருடத்திய அரசியல் சரித்திரத்தை ஒரே பக்கத்தில் பிரமாதமாகத் தலையங்கத்தில் வடித்துள்ளீர்கள். எந்தக் கலாசாரமும், மதமும் நமது வளர்ச்சிக்குக் காரணம் என்று இதுவரை மார்தட்டினோமோ, இன்று அவற்றைக் கொண்டே நாம் நம்மை அழித்துக் கொள்கிறோம்!

திருச்சி, அலெக்ஸ் ஃபெலிஸியா.

* கல்கி அக்டோபர் 28, இதழ் தலையங்கம் (ரத யாத்திரை, ரணகள யாத்திரையாக வேண்டாம்) படித்தேன். நாட்டு நலனில் அக்கறையுடன் எழுதப்பட்டுள்ளது. ஆனால் நான்காவது பாராவில், "இவர்களில் ஒருவருக்குக் கூட 'ராமஜென்மபூமி — பாபர் மஸ்ஜித்' என்பது இந்து முஸ்லிம் ஒற்றுமையின் சின்னமாக விளங்கட்டுமே" என்று கூறுகிற துணிவோ, நல்லறிவோ இல்லை" என்று அரசியல் — மதத் தலைவர்களைச் சாடியிருக்கிறீர்கள். தமிழக முதல்வர் கருணாநிதி இதே கருத்தை ஏற்கெனவே கூறியுள்ளார் என்பதை உங்கள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

மேலக்காட்டூர், கே. தியாகராஜன்.

வட்டமேஜை

# புதுக் குரல்களில் ஒரு குரல்

சமீப காலமாக ஹிந்தி திரைப்படங்களில் ஒலிக்கும் பின்னணிக் குரல்களுள் முன்னணியில் உள்ளது அனுராதா போட்வாலுடைய இனிய குரல். இவ்வாண்டு மராட்டிப் பாடல் ஒன்றிற்குத் தேசிய விருது பெற்றுள்ள அனுராதா, கல்கிக்கு அளித்த பேட்டி:

கேள்வி: இசைத் துறையில், குறிப்பாகப் பின்னணிப் பாட்டுத் துறையில், நீங்கள் நுழைந்தது எப்படி?

பதில்: நான் நான்காவது படித்துக் கொண்டிருந்த போது, லதா மங்கேஷ்கர் ஒரு பாடல் பதிவு செய்வதை நேரில் காண நேர்ந்தது. அப்போது முதலே பின்னணிப் பாடகியாக வேண்டும் என்று எனக்கு ஆசை. எஸ். டி. பர்மன்தான் 'அபிமான்' படத்தில் எனக்கு முதன் முதலாக வாய்ப்பு அளித்தார். அதன் பின் ஏற்பட்ட முன்னேற்றம் தெய்வச் செயல். என் கணவர், பப்பி லஹரியின் உதவியாளர் என்பதால், திருமணத்துக்குப் பிறகு எனக்குப் பின்னணி வாய்ப்புக்கள் அதிகமாகக் கிடைத்தன.

கே: வாணி ஜெயராம் போன்றவர்கள் இத் துறையில் முன்னேறுவதற்குப் பல பெரும் புள்ளிகளே தடையாக இருந்தனர் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். உங்கள் அனுபவம் எப்படி?

ப: நாமாக வாய்ப்புத் தேடிப் போனால் தானே பிரச்னை...! நான் வாய்ப்புக்களைத் தேடிப் போகவில்லை. அவை என்னைத் தேடி வரக் காத்திருந்தேன். வாய்ப்புக்கள் வழங்கப்பட்ட பிறகு அவற்றை நிறைவேற்றுவதில் எனக்கு எவ்விதமான தடையும் இருக்கவில்லை. சில சமயம் எனக்கு நானே தான் தடையாக இருந்திருக்கிறேன்! — சில டிஸ்கோ பாடல்களைப் பாட மறுத்திருக்கிறேன் — எனக்குச் சரிப்பட்டு வராது என்பதால்.

கே: உங்கள் பாடல்கள் இசைத் துறையை வளப்படுத்தியிருப்பதாகக் கூறுவீர்களா?

ப: சினிமாப் பாடல்கள் தவிர, துர்க்கை பற்றிய சுலோகங்கள், பகவத் கீதை, ராம் ரக்ஷா, இன்னும் பல சமஸ்கிருதப் பாடல்கள் அடங்கிய இசைத் தட்டுக்களை நான் வழங்கியுள்ளேன். இதனால் உங்கள் கேள்விக்கு நான் மனத்திருப்தியுடன் பதில் சொல்ல முடிகிறது.

கே: தெய்வத் துதிகளும், ஆன்மிகப் பாடல்களும் பாடுவதுதான் உங்களுக்கு ஆத்ம திருப்தி அளிக்கிறது என்கிறீர்கள்...?

ப: பக்திப் பாடல்களைப் பாடுகையில் தான் இறையுணர்வை முழுமையாக அனுபவிக்கிறேன். அந்த அனுபவத்தைச் சுலபமாகச் சொல்லில் வடித்து விட முடியாது.

கே: இத் துறையில் மிகவும் 'பிஸி' யான கலைஞர்களுள் ஒருவராக நீங்கள் இப்போது இருக்கிறீர்கள். குடும்பப் பொறுப்பையும் இசைப் பணியையும் ஒருங்கே சமாளிக்க முடிகிறதா?

ப: அன்னை காளியின் அருளால், எப்படியோ சமாளித்துக்கொண்டுதானே இருக்கிறேன்! சில நாட்கள் ரிகார்டிங் தியேட்டருக்குச் செல்லும்போது குடும்பப் பொறுப்பு அதிகமாக அழுத்தும். 'இன்று என்னால் பாடவே முடியாது' என்றுநான் நினைத்துக் கொள்வேன். ஆனால் ஒரே 'டேக்'கில் பாடல் பதிவாகி விடும்! அன்னை காளி அருள் இன்றி இது சாத்தியமாகுமா? எனக்கு வரும் பெயர், புகழ், விருது, எல்லாமே அவளைத்தான் சாரும். அவளின் கருவியே நான், அவள் நினைத்தபோதெல்லாம் என்னை மேடை ஏற்றிப் பாடச் செய்கிறாள். ஏழு வருடங்களுக்கு முன், தக்ஷிணேஸ்வர் காளியைத் தரிசித்ததிலிருந்து இந்த எண்ணம் என்னுள் வலுப்பட்டுள்ளது.

கே: இசை வாழ்க்கையில் மறக்க முடியாதது என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?

ப: இரண்டு சம்பவங்களைச் சொல்லலாம்! நேபாளத்தில் உலக மத குருமார்கள் மாநாட்டில், துர்காஷ்டோத்திரம் மற்றும் சுலோகங்கள் அடங்கிய எனது காஸெட்டை ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் வெளியிட்டார். இன்னொரு சம்பவம்: திருமணமான புதிதில் என் கவனமெல்லாம் குடும்பப் பொறுப்புகளின் மீதே இருந்தது. என் மாமனார் மட்டும் நான் பெரிய பாடகியாக வேண்டும் என்று வாழ்த்திக் கொண்டேயிருப்பார். அதிலும் ஆஷா போன்ஸ்லேயுடன் இணைந்து நான் பாட வேண்டும் என்பது அவருடைய ஆத்மார்த்தமான ஆசை. அந்தக் காலகட்டத்தில் அது நிச்சயமாக நடவாத காரியம் என்றே எனக்குத் தோன்றியது. அப்போதுதான் என் கணவர் ஒருமுறை வேலை நிமித்தமாக லதாஜியுடன் வெளிநாட்டுப் பிரயாணம் செய்ய நேர்ந்தது. அப்போது நான் பாடிய பாடல் டேப்பை லதாஜிக்குப் போட்டுக் காண்பித்திருக்கிறார். இதற்கிடையே என் மாமனார் திடீரென்று காலமாகி விடவே என் கணவரும் தமது வேலையை முடிக்காமலே திரும்பி வந்து விட்டார். மாமனாரின் பதின்மூன்றாம் நாள் காரியங்கள் நடந்து கொண்டிருந்த போது ஒரு போன் வந்தது: ஆஷாஜியுடன் இணைந்து நான் பாட வேண்டும் என்று தொலைபேசியில் கேட்டார்கள். தெய்வமாகி விட்ட எனது மாமனாரின் அன்பான ஆசி நிறைவேறியதை எண்ணிச் சிலிர்த்துப் போனோம்.

"நமது
சுயமேம்பாட்டுக்கான
கருவி அல்ல இசை;
இசையின்
மேம்பாட்டுக்கு
நாம் ஒரு
கருவி"



கே: வளரும் இசைக் கலைஞர்களுக்கு நீங்கள் கூற விரும்புவது என்ன?

ப: உங்கள் சுய மேம்பாட்டுக்காக இசையை ஒரு கருவியாகப் பயன்படுத்தாதீர்கள்; இசையின் மேம்பாட்டுக்கு நீங்கள் ஒரு கருவியாக அமைந்து உங்கள் ஆத்மார்த்தமான உழைப்பை அளியுங்கள். இதுவே உங்களையும் மேம்படுத்தும்.

— ஜெயஸ்ரீ ராஜ்.

# அந்த நாள் ஞாபகம்

**ஆ**த்மநாதன் சினிமாவுக்குப் போவது அபூர்வம். அதற்கு மூன்று காரணங்கள்: (1) அவனுக்கு சினிமா அவ்வளவாகப் பிடிக்காது. (2) சினிமாவுக்குச் செலவழித்தால் வீட்டு வாடகைக்கும் பால்காரனுக்கும் பணம் கொடுக்கும் பொழுது "உதைக்கும்" (3) எச்சு பாதி சினிமாவில் கத்துவாள்.

அன்று 25 — ஆம் தேதி. பண நெருக்கடி. காலை 6.30 மணி. அலமு காப்பிக்குச் சர்க்கரை இல்லை என்று ஒரு கரண்டி சர்க்கரை அடுத்த வீட்டிலிருந்து வாங்கி வந்தாள். ஞாயிற்றுக்கிழமையாதலால் ஆத்மநாதன் படுக்கையில் உட்கார்ந்து எச்சுவை முதுகில் இலேசாகத் தட்டிக் கொண்டிருந்தான். சர்க்கரைக் கரண்டியைக் கையில் வைத்துக் கொண்டே அலமு சொன்னாள்: "அடுத்த வீட்டு மாமி நேற்றிரவு சினிமாவுக்குப் போய் வந்தாளாம். 'தியாக பூமி' என்ற படமாம். ரொம்ப நன்றாயிருந்ததாம். இன்று கடைசி நாளாம். நாம் இன்று போகலாமா?"

நாகையில் "கல்கி"யின் படைப்பான "தியாக பூமி" படம் ஓடிக் கொண்டிருக்கிறதும் அன்று கடைசி நாள் என்றும் ஆத்மநாதனுக்குத் தெரியும். அவனே அன்று போகலாமா என்ற யோசனையில்தான் இருந்தான். ஒரு நாளும் இல்லாமல் அன்று அலமு வேறு வாய் திறந்து கேட்டு விட்டாள்! "ஸரி! இன்று மாலை ஆறு மணி 'ஷோ'வுக்குப் போகலாம். நீ போய்க் காப்பி போடு" என்றான். அலமு உற்சாகத்துடன் போய் ஏதோ ஒரு பாட்டை முனகிக் கொண்டே காரியம் செய்து கொண்டிருந்தாள்.

ஆத்மநாதன் மணி பர்ஸைத் திறந்து பார்த்தான். மூன்று ரூபாய் இருந்தது! 25ந் தேதியில் அவ்வளவு கணிசமான தொகை இருந்தது ஆச்சரியம்தான்! அந்தக் காலத்தில் சினிமா ரேட்: தரை நாலணா, சாதா பெஞ்ச் எட்டணா; பாக் பெஞ்ச் பன்னிரண்டணா! அதற்கு மேல் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பெல்லாம் ஆத்மநாதனால் நினைக்க முடியாதவை. அவனுடைய அந்தஸ்துக்குப் பாக் பெஞ்சுக்காவது போக வேண்டும். இரண்டு டிக்கெட் ரூ. 1.80. (எச்சுவிற்கு 2¾ வயதுதான்) தியேட்டருக்குப் போக வர, எட்டணா வண்டி. ஆக சினிமா பட்ஜெட் இரண்டு ரூபாய். மீதி ஒரு ரூபாய் இருக்கும். முதல் காரியமாக மறுநாள் இரண்டணாவுக்குக் கால் வீசை சீனி வாங்கி அடுத்த வீட்டு மாமிக்கு ஒரு கரண்டி சீனியைத் திருப்பித் தரச் சொல்ல வேண்டும். மிச்சம் பதினாலணாவைக் கொண்டு முதல் தேதி வரை தாக்குப் பிடிக்கலாம்! இவ்வாறு கணக்குப் போட்டு ஆத்மநாதன் அன்றுமாலை, "தியாக பூமி"க்குப் போவதை ஊர்ஜிதம் செய்து கொண்டான்.

**ப**த்து மணிக்குச் சாப்பாடானதும் ஒரு தூக்கம் போட நினைத்து, ஆத்மநாதன் பாயை எடுக்கப் போனான். வாசலில் கார் சத்தம்கேட்டது-போய்ப்பார்த்தான். பளபளவென்று ஜொலிக்கும் சிவப்புநிறக் கார் அந்தச் சந்திற்குள் வெகு ஜாக்கிரதையாக நுழைந்து, ஆத்மநாதன் வீட்டு வாயிற் படியை ஒட்டி நின்றது. பின் ஸீட் கதவைத் திறந்து கொண்டு ஒரு தடிமனான ஆசாமி இறங்கினார். ஸில்க் சட்டை, இடுப்பில் மயில்கண் வேஷ்டி, காதில் வைரக்கடுக்கன், மேலே விசிறி மடிப்புத் துப்பட்டா, நெற்றியில் ஒற்றை நாமம், மீசை, இடது கையில் 'தோசைக் கல்' வாட்சு, தங்கச் செயின்.

வந்தவர் படியேறி, "நீங்கள்தானே ஆத்மநாதன்? உங்களுடன்தான் பேச வேண்டும். உள்ளே போய்ப் பேசலாமா?" என்றார். ஆத்மநாதன் தயக்கத்துடன் அவரைக் 'காமிரா' அறைக்குள் அழைத்து வந்து ஸ்டூலின் மேல் உட்காரச் சொல்லி விட்டுத் தான் தன் டிரங்குப்பெட்டியையும் அலமுவின் டிரங்குப் பெட்டியையும் ஒன்றின் மேலொன்று அடுக்கி, அதன்மேல் ஒரு பெட்ஷீட்டை மடித்துப் போட்டுவிட்டு ராவணன் எதிரில் அனுமன் அமர்ந்தது போல் அமர்ந்தான்.

வந்தவர் பேச்சைத் துவக்கினார்:

"என் பெயர் சாரங்கபாணி. என் ஊர் கும்பகோணம். நான் ஒரு பெரிய கண்டிராக்டர். எனக்குத் தஞ்சாவூர் ஜில்லா கோர்ட்டில் ஒரு வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. இந்த ஊர் கண்ட்ராக்டர் சுடலைமுத்துவுக்கும் உங்கள் இலாகாவுக்கும் ஒரு "தகராறு" நடந்து அதில் போன வாரம் மேலிடத்திலிருந்து உங்களுக்கு ஓர் 'ஆர்டர்' வந்திருக்கிறது. அதனுடைய நகல் ஒன்று எனக்குக் கிடைத்தால் அதை வைத்துக் கொண்டு நான் தஞ்சாவூர் ஜில்லா கோர்ட்டில் நடக்கும் வழக்கை ஜெயித்து விடுவேன்.

டி. எஸ். ஜயராமன்

இன்று ஞாயிற்றுக்கிழமை. ஆபீஸில் யாரும் இருக்க மாட்டார்கள். ஆபீஸ் சாவி உங்களிடம்தான் இருக்கிறதாம். நீங்கள் சென்று அந்த ஆர்டருக்கு ஒரு 'காப்பி' டைப் செய்து வந்து வீட்டில் வைத்திருந்தால் நான் மூன்று மணிக்கு வந்து வாங்கிக் கொள்கிறேன். இந்தக் கவரில் நூறு ரூபாய் இருக்கிறது'' என்று கூறி ஒரு கவரை நீட்டினார்.

ஆத்மநாதனுக்கு 'நேர்மை' என்பது உடம்போடு பிறந்த குணம். வெகு கடுமையாகவே கூறி அந்த வேலைக்கு உடன்படக் கண்டிப்பாக மறுத்துவிட்டு, அந்த மனிதரை வெளியே போகச் சொன்னான். சாரங்கபாணி கீழ் உதட்டை மடித்து மேல் பற்களால் அழுத்திக் கொண்டு காரில் போய் அமரக் கார் நகர்ந்தது!

அலமு மத்தியான டிபனுக்கு அடைக்கு அரைத்துக் கொண்டிருந்தாள். இரண்டு அடை மிச்சம் வைத்தால் இரவு பத்து மணிக்குச் சினிமா பார்த்துவிட்டு வந்ததும் அடையைத் தொட்டுக் கொண்டு இருவரும் மோர் சாதம் சாப்பிட்டு விடலாம் என்பது அலமுவின் திட்டம்! ''யார் அது! கியாஸ் லைட் போல் வைரக் கடுக்கன்!'' என்றாள்.

ஆத்மநாதன், ''எவனோ ஆபீஸ் வேலையாக வந்தான். 'நாளைக்கு ஆபீஸுக்கு வா' என்று போகச் சொல்லி விட்டேன்'' என்றான். எல்லாவற்றையும் மனைவியிடம் கூறுவது அந்தக் காலத்தில் வழக்கமில்லை!

''தியாக பூமி'' அன்று கடைசி நாள் ஆகையால், டிக்கெட்டுக்கு முந்திக் கொள்வதற்காக, ஆத்மநாதன் நாலு மணிக்கே சைக்கிளை எடுத்துக் கொண்டு போய் ஒரு 'ஜட்கா' கொண்டு வந்தான். எச்சு புது கவுன் அணிந்து கொண்டு 'ஹய்யா! குதிரை வண்டி!' என்று குதித்தாள். குதிரை மணப் பெண்ணைப் போல் குனிந்து கொண்டு நின்றது. ஆத்மநாதன் சைக்கிளை உள்ளே வைத்துவிட்டுக் கையில் பூட்டும் சாவியுமாக வெளியே வந்தான். அலமு, கொசுவத்தைச்



சரி செய்து கொண்டே வெளியே வந்தான்.

அந்த சமயம்தான் அந்தோணி வேகமாக சைக்கிளில் வந்திறங்கினான். "துரை உங்களை உடனே இட்டாரச் சொன்னார்" என்றான். துரை என்று அவன் சொன்னது ஆத்மநாதனின் மேல் அதிகாரி. அவர் ஓர் ஆங்கிலோ இந்தியர். காடம்பாடியில் பங்களா. அந்தோணி துரையின் 'டவாலி'ச் சேவகன்.

ஆத்மநாதனும் அலமுவும் ஒருவரையொருவர் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டார்கள்! ஆத்மநாதன் அந்தோணியிடம், "சரி! நீ போய்த் துரையிடம் 'இதோ வருகிறேன்' என்று சொல். நாயைக் கட்டிப் போட்டு வை" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டுக் குதிரை வண்டிக்காரனிடம் இரண்டணா கொடுத்தனுப்பினான். அவன் 'டவாலி'யைப் பார்த்து விட்டதால் பேசாமல் போனான்.

அலமு எச்சுவை 'அழ அழ' உள்ளே தூக்கிக் கொண்டு போனாள். ஆத்மநாதன் உள்ளே சென்று உடைமாற்றிக் கொண்டான். அதாவது மேல் துண்டைக் கொடியில் போட்டுவிட்டு 'ஷர்ட்'டை வேட்டிக்குள் நுழைத்து வேட்டியை இறுக்கிக் கட்டி இடுப்பில் 'பெல்ட்' போட்டுக் கொண்டு கோட்டும் குல்லாவும் அணிந்து கொண்டான்.

காடம்பாடிக்கு சைக்கிளில் போகப் பத்து நிமிடங்கள்தான் ஆயிற்று. துரை ஒரு குறுக்கெழுத்துப் போட்டியில் கட்டங்களைப் பூர்த்தி செய்ய முயன்று கொண்டிருந்தார்.

ஆத்மநாதன் 'ஸலாம்' வைத்து, "குட்மார்னிங் ஸார்!" என்றதும் துரை, "சாவி உன்னிடம் இருக்கிறதல்லவா? உடனே ஆபீஸுக்குப் போய்ச் சுடலைமுத்து கேஸில் போன வாரம் கவர்ன்மெண்டிலிருந்து வந்த ஆர்டருக்கு ஒரு காப்பி டைப் செய்து கொண்டு வா" என்று ஆங்கிலத்தில் பொரிந்து தள்ளினார்.

ஒரு மணி நேரத்தில் ஆத்மநாதன் துரையின் உத்தரவை நிறைவேற்றிவிட்டு, பங்களாவை விட்டு வெளியே வரும் பொழுது சாரங்கபாணியின் கார் கேட்டிற்குள் நுழைந்தது. அவர் கழுத்தை நீட்டி "நூறு ரூபாயில் முடிய வேண்டிய சங்கதிக்கு முந்நூறு ரூபாய் செலவு வச்சிட்டியே" என்றார்.

ஆத்மநாதன் வீட்டுக்கு வந்தான். எச்சு அழுது, அழுது தூங்கிவிட்டிருந்தான். அலமு சுவாமி படத்துக்கு விளக்கேற்றிவிட்டு, "தீப தரிசனம்! நம் ஜன்மம் விமோசனம்!" என்று கமாஸ் ராகத்தில் பாடிக் கொண்டிருந்தான்!



மந்திரி: அமைச்சரவையில் மேலும் பல புதிய மந்திரிகளைச் சேர்த்தது தப்பாப் போச்சு மன்னா!

மன்னர்: ஏன், என்ன ஆச்சு?

மந்திரி: பழைய அமைச்சர்கள் புதிய அமைச்சர்களை 'ராக்கிங்' செய்யறாங்க!

— குடந்தை எல். ராம்பிரபு.




மார்க்கெட் பொருளாதாரம் எனப்படும் அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் அற்ற (Free Market Economy) பொருளாதார முறையை ரஷ்யாவில் 500 நாட்கள் காலக்கெடுவில் அமுலுக்குக் கொண்டு வருவது என்று முடிவு செய்யப்பட்டுள்ளது. இதன் மூலம் அரசாங்கமே முதலாளியாக இருந்து நடத்தி வரும் எல்லாத் தொழில்களும் தனியார்வசம் ஒப்புவிக்கப்படும். அதற்கான சட்டங்கள் சோவியத் பார்லிமெண்டில் நிறைவேற்றப்படும். தங்கு தடையில்லாத வெளிநாட்டு மூலதனம் (குறிப்பாக ஜப்பானிய மூலதனமும் தொழில்நுட்பமும்) ரஷ்யாவில் குவிய இரும்புத் திரைக் கதவுகள் அகலத் திறக்கப்படுகின்றன. சோவியத் யூனியனில் ஸ்டாக் மார்க்கெட்டுகள் ஏற்படுத்தப்பட்டுத் தனியார் கம்பெனிகளில் சோவியத் மக்கள் பங்குகளை வாங்க ஏற்பாடுகள் செய்யவிருக்கிறார்கள்.

— எல். அனந்தராமன்.

# சிவகாமியின் சபதம்

முப்பத்தோராம் அத்தியாயம்

## வைஜயந்தி

வழித் துணையாகக் கிடைத்த இந்த வீரன் எந்த மயூரசன்மனைப் பற்றிக் கூறி வந்தானோ அதே மயூரசன்மனைக் குறித்து ஏற்கெனவே புத்த பிக்ஷு கூறியிருந்தது பரஞ்சோதியின் ஞாபகத்தில் இருந்தது. ஆனால், அவர் கூறிய வரலாறு இவ்வளவு ரஸமாக இல்லை. அந்த வரலாற்றை அவர் கூறியதன் நோக்கமும் பரஞ்சோதிக்குப் பிடிக்கவில்லை. ``அந்த மயூரசன்மனைப் போல் ஒருவேளை நீயும் ஆனாலும் ஆகலாம்!'' என்று புத்த பிக்ஷு கூறியது பரஞ்சோதியின் உள்ளத்தில் அருவருப்பைத்தான் உண்டு பண்ணிற்று. ஏன்? மயூரசன்மன் பேரிலேயே அவனுக்கு அருவருப்பு உண்டாக அது காரணமாக இருந்தது.

ஆனால், இப்போது மயூரசன்மன் செய்த வீரப் போரையும் உடம்பில் முப்பத்தாறு காயங்களுடன் அவன் பல்லவ மன்னனின் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்பட்டதையும் அறிந்ததும், அவன் மீது பரஞ்சோதியின் மரியாதை பன்மடங்கு வளர்ந்தது.

``அப்பேர்ப்பட்ட வீரன் பல்லவ மன்னனுக்குச் சரணாகதி அடைய மறுத்துத்தான் இருப்பான். அரசனுக்கு எதிராகக் கலகம் செய்பவர்களைப் பூமியில் புதைத்து யானையின் காலால் இடறச் செய்வதுதானே வழக்கம்! பல்லவ ராஜாவும் அப்படிச் செய்து விட்டாராக்கும்!'' என்று பரஞ்சோதி மனக் கசப்புடன் கூறினான்.

``இல்லை, தம்பி, இல்லை! சாதாரணமாய், அங்க, வங்க, கலிங்க, காஷ்மீர, காம்போஜ தேசங்களின் ராஜாக்களாயிருந்தால் அப்படித்தான் செய்திருப்பார்கள். ஆனால் காஞ்சி பல்லவ மன்னர்களின் காரியங்கள் ஒரு தனிப் போக்காக இருக்கும்...''

``பல்லவ மன்னர் என்ன செய்தார்?''

``மயூரசன்மனை மன்னித்ததோடு, அவனுடைய வீரத்தை மெச்சி அவன் ஸ்தாபித்த ராஜ்யத்தை அவனுக்கே திருப்பிக் கொடுத்து விட்டார். அவரே நேரில் சென்று மயூரசன்மனுக்கு முடிசூட்டி விட்டு வந்தார்!''

``அப்படியா?'' என்று பரஞ்சோதி தன் உண்மையான வியப்பைத் தெரிவித்து விட்டு, ``அதைக் குறித்து மயூரசன்மன் நன்றி பாராட்டினானா?'' என்று கேட்டான்.

``மயூரசன்மன் மட்டுமில்லை. அவன் ஸ்தாபித்த கதம்ப வம்சத்தில் பிறந்தவர்கள் எல்லாரும் சென்ற இருநூறு வருஷத்துக்கு மேலாகப் பல்லவர்களுக்குக் கப்பம் செலுத்திக் கொண்டு நன்றியுடன் இருந்து வந்தார்கள். கிருஷ்ணை – துங்கபத்திரை நதிக்கரை ஓரமாய் அவர்களுடைய இராஜ்யமும் பெருகி வந்தது. கொஞ்ச காலத்துக்குப் பிறகு வைஜயந்தி பட்டணத்தில் தங்கள் தலைநகரை ஸ்தாபித்துக் கொண்டார்கள். அவர்களுக்கு ஆபத்து நேர்ந்த சமயங்களில் பல்லவ மன்னர்களும் வேண்டிய உதவி புரிந்து வந்தார்கள். இருபது வருஷத்துக்கு முந்தி புலிகேசியின் சிற்றப்பன் மங்களேசன் கதம்ப ராஜ்யத்தின் மீது படையெடுத்த செய்தி தெரியுமோ இல்லையோ?''

``தெரியாதே? அது என்ன விஷயம்?'' என்று பரஞ்சோதி ஆவலுடன் கேட்டான்.

``ஆமாம்; நீ சிறுபிள்ளை. உனக்கு எப்படி

அமரர் **கல்கி**

அது தெரிந்திருக்கும்? இப்போது ராட்சஸ ஸ்வரூபம் கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருகிறானே, இந்தப் புலிகேசியும் இவனுடைய தம்பிமார்களும் சிறு பிள்ளைகளாக இருந்த போது, இவர்களுடைய சிற்றப்பன் மங்களேசன் என்பவன் வாதாபி ராஜ்யத்தை ஆண்டு வந்தான். அவனுக்குத் திடீரென்று அயல் நாடுகளைக் கைப்பற்றிப் பெரிய சக்கரவர்த்தி ஆக வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. துங்கபத்திரையைக் கடந்து கதம்ப ராஜ்யத்துக்குள் பிரவேசித்தான். வைஜயந்தி நகரம் வரையில் வந்து அந்த நகரத்தை முற்றுகை போட்டு விட்டான். அப்போது வடக்கு மண்டலத்துப் பல்லவ சைனியந்தான் கதம்ப ராஜாவின் ஒத்தாசைக்குச் சென்றது. வைஜயந்தி பட்டணத்துக்கு அண்மையில் பெரிய யுத்தம் நடந்தது —''

''யுத்தத்தின் முடிவு என்ன ஆயிற்று?''

''கேட்பானேன்! வீர பல்லவ சைனியந்தான் ஜயித்தது. சளுக்கர்கள் தோற்றுப் பின்வாங்கி ஓடினார்கள். ஆஹா! அப்போது மட்டும் அந்தச் சளுக்கர் படையைப் பல்லவ சைனியம் பின்தொடர்ந்து போய் அடியோடு நிர்மூலம் செய்திருந்தால், இப்போது இந்த யுத்தமே வந்திருக்காது!'' என்றான் அவ் வீரன்.

அந்தப் பழைய வரலாறுகளையெல்லாம் அறிந்து கொள்ளுவது பரஞ்சோதிக்கு ரொம்பவும் சுவாரஸ்யமாயிருந்தது. யுத்தங்களைப் பற்றியும் அவை நடந்த முறைகளைப் பற்றியும் வெற்றி தோல்விகளைப் பற்றியும் தெரிந்து கொள்ள அவனுக்கு மிகவும் ஆவலாயிருந்தது. நிலா இல்லாத முன்னிரவில் வழிப் பிரயாணத்தின் அலுப்புத் தெரியாமலிருப்பதற்கும் அது ஏதுவாயிற்று.

''தோல்வியடைந்து ஓடிய சளுக்க சைனியத்தைப் பல்லவ சைனியம் ஏன் தொடர்ந்து போகவில்லை?'' என்று அவன் கேட்டான்.

''அதற்குப் பல காரணங்கள் உண்டு. முக்கியமான காரணம் என்னவென்றால், வைஜயந்தி பட்டணத்துக்கு அருகில் நடந்த யுத்தத்தில் பல்லவ சைனியம் ஒரு பெரிய நஷ்டத்தை அடைந்தது. பல்லவ சேனாதிபதி அந்தப் போரில் உயிர் துறந்தார்!''

பரஞ்சோதியின் நினைவு சட்டென்று வேறு பக்கம் திரும்பியது.

''ஐயா! அந்த வீர பல்லவ சேனாதிபதியின் பெயர் என்ன?'' என்று அவன் கேட்டான்.

''நீ கேள்விப்பட்டதில்லையா? சேனாதிபதி கலிப்பகைதான். இப்போதுள்ள கலிப்பகையாரின் மாமன்...''

''கேள்விப்பட்டிருக்கின்றேன். அந்த வீர புருஷரை மணம் செய்து கொள்வதாக இருந்த திலகவதியாரைப் பற்றியும் கேட்டிருக்கிறேன்'' என்று பரஞ்சோதி பக்தி பரவசத்துடன் கூறினான்.

''உனக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே! நீ பெரிய சைவன் போலிருக்கிறதே!'' என்றான் அவ் வீரன்.

''ஆம், ஐயா! என் உற்றார், உறவினர் எல்லாரும் சைவர்கள். திருநாவுக்கரசு அடிகளைத் தரிசிப்பதற்கென்றே நான் கிளம்பிக் காஞ்சிக்கு வந்தேன்...'' என்று கூறிப் பரஞ்சோதி சட்டென்று நிறுத்தினான்.

''அப்படியா, தம்பி! நானும் சைவன் தான். திருநாவுக்கரசரை நீ காஞ்சியில் தரிசிக்கவில்லையா?''

''இல்லை!''

''ஏன்?''

''அதற்குள் இந்த வேலை வந்து விட்டது.''

''எந்த வேலை?''

பரஞ்சோதி சற்று நிதானித்து, ''ஐயா! என்னுடைய வேலை என்ன என்பது பற்றி நீங்கள் ஒன்றும் கேட்காவிட்டால், நான் பொய் சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படாது!'' என்றான்.

''ஆஹா! நீ வெகு புத்திசாலிப் பிள்ளை!'' என்றான் அவ் வீரன். பிறகு சொன்னான்: ''தம்பி! உன் மாதிரியே எனக்கு ஒரு புதல்வன் இருக்கிறான். உன் வயதேதான் அவனுக்கும். இந்தப் பிரயாணத்தில் என்னோடு தானும் வர வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தான். நான் கூடாது என்று தடுத்து விட்டேன். அதனால் அவனுக்கு என் பேரில் கோபம்......''

இப்படிப்பட்ட ஒரு வீரத் தந்தையைப் பெற்ற அதிர்ஷ்டசாலியைக் குறித்துப் பரஞ்சோதியின் மனத்தில் சிறிது பொறாமை உண்டாயிற்று.

அந்தத் தகாத எண்ணத்தைப் பரஞ்சோதி மறக்க முயன்றவனாய், ''ஐயா! வைஜயந்தி யுத்தத்தைப் பற்றிக் கூறி இடையில் நிறுத்தி விட்டீர்களே! அந்தப் போரில் சேனாதிபதி கலிப்பகை உயிர் துறந்ததாகச் சொன்னீர்கள். ஆனால், பல்லவ சைனியத்துக்கு வேறு சேனாதிபதி கிடைக்கவில்லையா? தோற்று ஓடிய சளுக்கர்களைத் தொடர்ந்து பல்லவ சைனியம் ஏன் போகவில்லை?'' என்று கேட்டான்.

''விசித்திர சித்தர் என்று பட்டப் பெயர் பெற்ற காஞ்சி சக்கரவர்த்தியை நீ பார்த்திருக்கிறாயா, தம்பி?'' என்று பொருத்தமில்லாமல் கேட்டான் அவ்வீரன்.

பரஞ்சோதி மௌனம் சாதித்தான்.

அவனுடைய மௌனத்தைப் பாராட்டி அவ் வீரன் தலையை ஆட்டி விட்டு மேலே சொன்னான்:

''விசித்திர சித்தர் அந்தக் காலத்தில் மிக மிக விசித்திரமான எண்ணங்களைக்

கொண்டிருந்தார். உலகத்தில் யுத்தம் என்பதே கூடாது. பகைமையும் துவேஷமும் இருக்கக் கூடாது. எல்லா ஜனங்களும் சிற்பம் முதலிய கலைகளில் ஈடுபட்டு ஆடல் பாடல்களில் ஆனந்தமாய்க் காலம் கழிக்க வேண்டும் என்ற எண்ணங்கள் அவர் மனத்தில் குடிகொண்டிருந்தன. நமக்கு இருக்கிற இராஜ்யம் போதும், அதிகம் என்னத்திற்கு என்ற வைராக்கியத்தையும் கொண்டிருந்தார். அப்பேர்ப்பட்ட சமயத்தில் புலிகேசியிடமிருந்து சமாதானக் கோரிக்கையும் கிடைக்கவே, யுத்தத்தை நிறுத்தும்படி கட்டளை போட்டு விட்டார்.''

''புலிகேசி எப்போது அரசன் ஆனான்?''

''சிற்றப்பன் மங்களேசன், ராஜ்யத்தின் மேலுள்ள ஆசையினால், புலிகேசியையும் அவன் தம்பிகளையும் சிறையில் போட்டிருந்தான். மங்களேசன் வைஜயந்தியின் மேல் படையெடுத்த போது புலிகேசியும் அவன் தம்பிமார்களும் சிறையிலிருந்து தப்பி வெளியே வந்து விட்டார்கள். தோல்வியடைந்து திரும்பிய மங்களேசனைக் கொன்று விட்டு வாதாபி மன்னனாகப் புலிகேசி முடி சூட்டிக் கொண்டான். உடனே காஞ்சிச் சக்கரவர்த்திக்குச் சமாதானத் தூது அனுப்பினான். நாக சர்ப்பத்துடன் சமாதானம் செய்து கொண்டது போல் அந்தப் பாதகனுடன் மகேந்திர சக்கரவர்த்தியும் அப்போது சமாதானம் செய்து கொண்டார். அதனுடைய விபரீதப் பலனை இப்போது அனுபவிக்கிறார்.''

''என்ன விபரீதப் பலன்?.....''

''விபரீதப் பலன் என்னவா? புலிகேசியின் சைனியங்கள் இந்த யுத்தத்தில் வைஜயந்தியைக் கைப்பற்றிக் கொண்டு மேலேறி வருகின்றன என்று உனக்குத் தெரியாதா? இன்னொரு பயங்கரமான செய்தி கேள்விப்படுகிறேன். வைஜயந்தி பட்டணத்தைக் கைப்பற்றியவுடனே, புலிகேசி அந்த நகரிலிருந்த செல்வங்களையெல்லாம் கொள்ளையடித்து, நகரையே கொளுத்தும்படியாகக் கட்டளையிட்டான் என்று தெரிகிறது. இதை என்னால் நம்பவே முடியவில்லை. ஒருவேளை உண்மையாயிருந்தால்?....''

''இருந்தால்.....?''

''உண்மையாயிருந்தால், 'காஞ்சி மகேந்திரவர்மருக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்' என்றுதான் சொல்லுவேன். உலகத்தில் ராஜாக்களும் சக்கரவர்த்திகளும் 'போரிலே புலி' என்றும், 'சண்டையிலே சிங்கம்' என்றும் பட்டப் பெயர் வாங்குவார்கள். காஞ்சி சக்கரவர்த்தி 'சித்திரக்காரப் புலி' என்று பட்டம் பெற்றிருக்கிறார் அல்லவா? அவருக்கு இதெல்லாம் வேண்டியதுதானே!''

பரஞ்சோதி மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்தான். வைஜயந்தி பட்டணம் எரிக்கப்பட்ட செய்தி அவன் மனத்தைக் கலக்கியிருந்தது.

சற்றுப் பொறுத்து அவ் வீரன், ''தம்பி! எங்கே போகிறாய், என்ன காரியமாகப் போகிறாய் என்று உன்னை நான் கேட்கவில்லை. ஆனால், இன்று ராத்திரி எங்கே தங்குவதாக உத்தேசம் என்று சொல்லுவதில் உனக்கு ஆட்சேபம் ஒன்றும் இராதே?'' என்றான்.

''இந்த மலையைத் தாண்டியதும் அப்பால் ஒரு மகேந்திர விடுதி இருப்பதாகச் சொன்னார்கள். அதில் தங்கலாமென்று எண்ணியிருக்கிறேன். இருட்டுவதற்கு முன்னால் மகேந்திர விடுதிக்குப் போய்ச் சேர்ந்து விடலாமென்று நினைத்தேன்.''

''ஆ! அதோ பார் வெளிச்சத்தை! நீ சொன்ன மகேந்திர விடுதி அந்த வெளிச்சம் தெரிகிற விடுதான். நானும் இன்றிரவு அங்கேதான் தங்கப் போகிறேன்'' என்றான் அவ் வீரன்.

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்
## கும்பகர்ணன்

பிரயாணிகள் இருவரும் விடுதியை நெருங்கிய போது, அங்கே ஆயத்தமாகக் காத்திருந்த வீரர்கள் நால்வர் கையில் உருவிய கத்திகளுடன் பளிச்சென்று முன்னால் வந்து, ''நில்!'' என்றார்கள். விடுதியின் வாசலில் நின்ற இன்னொரு வீரன் கையில் பிரகாசமான தீவர்த்தியைப் பிடித்துக் கொண்டிருந்தான். அதன் ஒளியில் மற்ற நால்வருடைய கையிலும் இருந்த கத்திகள் மின்னித் திகழ்ந்தன.

அப்போது அந்தக் குதிரை வீரன் தன் அங்கியினுள்ளிருந்து ஏதோ ஓர் அடையாளத்தை எடுத்துக் காட்டவே, அந்த வீரர்கள் நால்வரும் சிறிது மரியாதையுடன் ஒதுங்கி நின்று அவனுக்கு வழி விட்டுப் பின்னால் வந்த பரஞ்சோதியை அணுகினார்கள். குதிரை வீரன் திரும்பிப் பார்த்து, ''அவனும் என்னுடன் வருகிறான்!'' என்று சொல்லவே, பரஞ்சோதிக்கும் அவர்கள் வழி விட்டார்கள்.

தொடர்ச்சி 34 ஆம் பக்கம்.

நீங்கள் ஏதேனும் இன்சுலேட்டட் பாத்திரம், அதனுள் இருக்கும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கன்டெய்னர் இவைகளை நன்கு பரிசோதிக்காது வாங்கினால் உங்கள் குடும்பத்தினருக்கு "ஃபுட் பாய்ஸனிங்" ஏற்படக் கூடும் — துரு கலந்த சாம்பாரையும், அரித்துப்போன ஸ்டீல் கலந்த காய்கறிகளையும் சாப்பிட்டு.

## மில்ட்டனில் சேலம் ஸ்டீல் உள்ளது — இது பாய்ஸன்-ப்ரூஃப் ஆகும்.

கான்வாய் 4 சைஸ்களில் கிடைக்கிறது

பெரும்பாலான இன்சுலேட்டட் பாத்திர தயாரிப்பாளர்கள் மட்டரக ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மாற்றுப்பொருளை உபயோகிக்கின்றனர். அதன் விளைவாக "ஃபுட்-பாய்ஸனிங்" ஏற்படக்கூடும். சில தயாரிப்பாளர்கள் சேலம் ஸ்டீல் உபயோகிப்பதாகக் கூறுவது கன்டெய்னர்களுக்கு மட்டும்தான். டிஃபின்களின் மூடிகளுக்கு உபயோகிப்பதில்லை.

ஷெரிஃப் மற்றும் செனேட்டர்

ஆனால் மில்டன் பாத்திரங்களில் கன்டெய்னர், மூடி இரண்டுமே நிச்சயமாக ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கொண்டு தயாரிக்கப்படுகின்றன.

வாழ்நாள் முழுதும் துருப் பிடிக்காமல், அரித்துப் போகாமல் இருக்கும் ஸ்டீல் இது ஒன்றுதான். தவிர "ஸ்டீல் அத்தாரிடி ஆஃப் இந்தியா" மற்றும் "அமெரிக்கன் அயர்ன் அண்ட் ஸ்டீல் இன்ஸ்டிட்யூட்" மூலம் நிர்ணயிக்கப்பட்ட தரத்தின்படி உருவானது இந்த ஸ்டீல் மட்டுமேயாகும்.

அதாவது உணவு வைப்பதற்கு மில்ட்டன் வழங்கும் ஒவ்வொரு ஸர்வெட் மற்றும் ஒவ்வொரு டிஃபின் பாத்திரமும் உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாகும்.



கலிப்சோ, ஷிரான் மற்றும் செனேட்டர்

## மீண்டும் சூடாக்கத் தேவையில்லை — அதனால் ஊட்டச்சத்து கூடுதலாக கிடைக்கிறது.

நீங்கள் உணவை மீண்டும் சூடாக்கும் ஒவ்வொரு முறையும் சில ஊட்டச் சத்துக்கள் விரயமாகின்றன. மில்ட்டன் இன்சுலேட்டட் பாத்திரம் இருக்கையில் உணவை மீண்டும் சூடாக்க வேண்டிய அவசியமே இல்லை.

உண்மையில் மில்ட்டன் ஸர்வெட், டிஃபின் ஒவ்வொன்றிலும் தடிமனான 12 மி.மீ. 'தெர்மில்' அடுக்குகள் உள்ளன. இப்போதுள்ள இன்சுலேட்டிங் பொருட்களில் அனைத்திலும் ஆற்றல் மிக்கதாகும் 'தெர்மில்'. இது உங்கள் உணவை தொடர்ந்து பலமணி நேரங்களுக்கு சூடாக வைக்கிறது. இதனால் உங்கள் குடும்பத்தினருக்கு சாதம், சாம்பார், அல்லது காய்கறிகளின் ஒவ்வொரு கவளத்திலும் அதிகப் புரதம், அதிக கார்போஹைட்ரேட் மற்றும் அதிக வைட்டமின் கிடைக்க முடியும்.

அதுமட்டுமல்ல, மில்டன் ஸர்வெட் மற்றும் டிஃபின் உங்களது க்யாஸ் செலவிலும் சேமிப்பு ஏற்படுத்துகின்றன. காரணம் நீங்கள் க்யாஸை உணவு தயாரிப்பதற்காக ஒரு முறை மட்டுமே உபயோகிக்கிறீர்கள். மீண்டும் மீண்டும் சூடாக்குவதற்கு அல்ல.

இப்போது நீங்கள் மிகச்சிறந்த ஸர்வெட் மற்றும் டிஃபின் வாங்க வேண்டுமெனில் அருகிலுள்ள மில்ட்டன் டீலரிடம் செல்லுங்கள். உணவு விஷயத்தில் அஜாக்கிரதையாக இருப்பது குடும்பத்தினரின் வாழ்விற்கே உலைவைக்கக்கூடும்.



ஸில்வர் ஸ்டார் மற்றும் பாஷ்




மில்டன் வாங்குவீர். குவாலிட்டி பெறுவீர்

Enterprise/MP/30/Tm.

31 ஆம் பக்கத் தொடர்ச்சி.,

மூத்த பிரயாணி, விடுதித் தலைவனிடமும் மேற்சொன்ன அடையாளத்தைக் காட்டி, ''நாங்கள் இருவரும் இன்று இரவு விடுதியில் தங்க வேண்டும். குதிரைகளுக்கும் தீனி வேண்டும்'' என்றான்.

விடுதித் தலைவன் மற்ற வீரர்களைப் போலவே மரியாதையுடன் ''அப்படியே ஐயா!'' என்று மறுமொழி கூறினான். இதெல்லாம் பரஞ்சோதிக்கு மிக்க வியப்பையளித்தது. அந்த வீரன் ஏதோ பெரிய இராசாங்க காரியமாகப் போகிறான் என்றும் பரஞ்சோதி ஊகித்துக் கொண்டான். ஒருவேளை பல்லவ சைனியத்தைச் சேர்ந்த பெரிய தளபதியாகக் கூட அவன் இருக்கலாம் என்றும் சந்தேகித்தான். தான் இப்போது ஏற்றுக் கொண்டிருக்கும் காரியம் ஒருவிதமாக முடிந்த பிறகு, இந்த வீரன் எங்கே இருந்தாலும் தேடிக் கண்டுபிடித்து இவனுடைய சிநேகிதத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை பரஞ்சோதிக்கு உண்டாயிற்று.

இருவரும் உணவு அருந்திய போது, அவ்வீரன் பரஞ்சோதியைப் பார்த்து, ''தம்பி! வைஜயந்தி யுத்தத்தைப் பற்றி உனக்குச் சொன்னேனல்லவா? அந்தக் காலத்தில் எனக்குக் கிட்டத்தட்ட உன் வயதுதான் இருக்கும். அப்போது ஒரு தடவை நான் இந்த விடுதியில் தங்கியிருக்கிறேன். அன்றிரவு எனக்கு ஒரு விசித்திரமான அனுபவம் ஏற்பட்டது!'' என்றான்.

''அது என்ன?'' என்று பரஞ்சோதி ஆவலுடன் கேட்டான்.

''தம்பி! இத்தனை நேரமும் நாம் ஒருவர் பெயரை ஒருவர் தெரிந்து கொள்ளாமலே பேசிக் கொண்டிருக்கிறோம். என் பெயரைத் தெரிவிப்பதில் எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. எனக்கு என் தாய் தந்தையர்கள் இட்ட பெயர் வஜ்ரபாஹு. ஆனால், என் சிநேகிதர்கள் என்னைக் கும்பகர்ணன் என்று அழைப்பார்கள். தூங்கினால் அப்படித் தூங்குவேன். இன்று போலவே அன்றைக்கும் நாளெல்லாம் பிரயாணம் செய்திருந்தபடியால் அசந்து தூங்கி விட்டேன். அப்போது என்ன நடந்தது தெரியுமா?''

''ஏதாவது பிசாசு சொப்பனம் கண்டு உளறியடித்துக் கொண்டு எழுந்திர்களாக்கும்!'' என்று பரஞ்சோதி குறும்பாகக் கூறினான்.

அதைக் கேட்ட வஜ்ரபாஹு நகைத்து விட்டு, ''இல்லை இல்லை! அதைவிட ஆபத்தான விஷயம்! வீடு இடிந்து என் மேலே விழுந்து விட்டது போல் சொப்பனம் கண்டு கண்ணை விழித்துப் பார்த்த போது, ஐந்தாறு தடியர்கள் என் மேல் உட்கார்ந்து அமுக்கிக் கொண்டிருந்தார்கள். இரண்டு

பேர் என் இடுப்பைத் தடவிக் கொண்டிருந்தார்கள். என்னத்திற்காகத் தெரியுமா?''

''ஐயா! என்னை ஞானதிருஷ்டியுள்ளவன் என்று நினைத்துக் கொண்டீர்களா? தாங்கள் சொல்லா விட்டால் எனக்கு எப்படித் தெரியும்?'' என்றான் பரஞ்சோதி.

''நல்லது, தம்பி! நான் சேனாதிபதி கலிப்பகையாருக்குக் கொண்டு போன ஓலையைத் தஸ்கரம் செய்வதற்காகத்தான். என் இடுப்பில் அந்த ஓலை இருக்குமென்று அந்த முரடர்கள் எண்ணினார்கள்!''

''ஆஹா!'' என்றான் பரஞ்சோதி. அவனை அறியாமல் அவனுடைய வலது கை இடுப்பைத் தொட்டுப் பார்த்தது. இது ஒரு கணந்தான்; மறுகணம் கை பழைய நிலையை அடைந்தது.

ஆனால், அந்த ஒரு கணநேரச் செய்கையை வீரன் வஜ்ரபாஹுவின் தீவிரமான கண்கள் கவனிக்காமல் போகவில்லை.

''அப்புறம் என்ன ஆயிற்று, ஐயா! அந்த முரடர்களுக்குத் தாங்கள் கொண்டு போன ஓலை கிடைத்ததா?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''ஓலை கிடைக்கவில்லை. என்னுடைய கை முஷ்டியினால் தலைக்கு ஏழெட்டுக் குட்டுக்கள் கிடைத்தன! பெற்றுக்கொண்டு தலை தப்பியது தம்பிரான் புண்ணியமென்று ஓட்டம் பிடித்தார்கள்!''

பரஞ்சோதி சிரித்து விட்டு, ''அந்த மூட்டாள்களுக்கு நன்றாய் வேண்டும்! உங்களுடைய கும்பகர்ணத் தூக்கத்தைக் கலைத்தார்கள் அல்லவா? யாராவது

## அருள்வாக்கு

கீதையில் பகவான் இரண்டு விதமான ஸௌக்யங்களைச் சொன்னார். **'யதக்ரே விஷமிவ, பரிணாமே அம்ருதோபமம்'** என்பது ஒன்று. ஆரம்பத்தில் விஷம் போல இருந்து விட்டு முடிவிலே எது அம்ருதமாகிறதோ அதுதான் உயர்ந்த ஸாத்விக ஸௌக்யம். முதலில் ஆலஹாலம் வந்து விட்டுப் பிறகு அமிருதம் வந்தது இப்படித்தான். சாஸ்திரம் தனி மநுஷ்யன், குடும்பம், ஸமூஹம் எல்லாவற்றையும் கட்டுப் படுத்துகிறதே என்று ஆரம்பத்தில் விஷம் மாதிரிக் கசந்தாலும், போகப் போக இதுதான் எல்லாக் கட்டுக்களும் தெறித்துப் போகிற ஆத்ம ஸ்வதந்திரம் என்கிற பேரானந்தத்தைத் தருகிற அமிருதம் என்று தெரியும். இதிலே விஷம் தாற்காலிகம். அமிருதம் சாச்வதம். இன்னொரு ஸௌக்யம், **'யதக்ரே அம்ருதோபமம் பரிணாமே விஷமிவ'** என்பது. முதலில் அம்ருதமாகத் தித்தித்து விட்டுப் போகப் போக விஷமாகி விடுவது. இங்கே அம்ருதம் தாற்காலிகம்; விஷம் சாச்வதம். அமெரிக்காவில் டாலர் இப்படித்தான் முதலில் அம்ருதமாயிருந்து விட்டு இப்போது விஷமாகியிருப்பதை அவர்களே தெரிந்து கொண்டிருக்கிறார்கள். இப்படியே இங்கும் எதிர்காலத்தில் தனி மனித நிறைவு, ஸமூஹக் கட்டுக் கோப்பு இரண்டும் ஹானியடைந்து, சாஸ்திர விரோதமாகப் பண்ணினதெல்லாம் முதலில் அம்ருதமாயிருந்தாலும், பிறகு இப்படி விஷமாகி விட்டதே என்று புரிந்து கொண்டு அழுகிற காலம் வரக்கூடும். அப்போது அம்ருதத்தைத் தேடுகிறவர்களுக்கு அது எங்கேயிருக்கிறது என்று தெரிய வேண்டும் அல்லவா? இப்போது நாம்



பண்ணுகிற மாறுதல்கள்தான் முற்றி அவர்களுக்கு விஷம் தலைக்கேறிய ஸ்திதி ஏற்படப் போகிறபடியால் இதை (அமிருதம் எங்கேயிருக்கிறது என்பதை) அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டியது நம் கடமை. அதற்காகத்தான், இப்போது நாமே இந்த சாஸ்திரோக்தமான ஸமாசாரங்கள் என்ற அமிருதத்தைக் குடிக்கா விட்டாலும், பின் தலைமுறைகளில் நம்மை விட க்ஷீண தசைக்குப் போய் விஷம் தலைக்கேறி விமோசனம் தேடுகிறவர்கள் தேடும் போது அவர்களுக்கு உதவுவதற்காக இந்த ஸமாசாரங்களை (குழி தோண்டிப் புதைத்து விடாமல்) சொல்லிக் கொண்டாடுவது இருக்க வேண்டும். இந்த தீபம் வருங் காலத்திலாவது வழிகாட்ட வேண்டும்.

இந்த எண்ணத்தில்தான், காரியத்தில் செய்ய முடியாமல் கையைக் கட்டிப் போட்டிருந்தாலும் இன்னம் வாயைக் கட்டவில்லையே என்பதால் சாஸ்திர விதிகளை ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

ஒருவன் தனியாக வந்து இடுப்பைத் தடவி யிருந்தால் ஒருவேளை ஓலை கிடைத்திருக்கும்'' என்றான்.

''அப்போதும் கிடைத்திராது'' என்றான் வஜ்ரபாஹு.

''ஏன்? நீங்கள் கும்பகர்ணன் மாதிரி தூங்குவேன் என்று சொன்னீர்களே?''

''உண்மைதான், தம்பி! ஆனால், ஓலை இடுப்பில் இருந்தால்தானே கிடைக்கும்?''

''பின், வேறு பத்திரமான இடத்தில் அதை வைத்துக் கொண்டிருந்தீர்களா?''

''ஆமாம், அக்கினி பகவானிடமே ஒப்படைத்து விட்டேன்.''

''இதென்ன? நல்ல தூதராயிருக்கிறீர்களே? ஓலையை நெருப்பிலே போட்டு விட்டு எதற்காகப் பிரயாணம் செய்தீர்கள்?''

''ஓலையை நெருப்பிலே போடுவதற்கு முன்னால் அதைப் படித்து விஷயத்தை மனத்தில் பதிய வைத்துக் கொண்டேன்.''

''ஓஹோ! இராஜாங்க தூதர்கள் அப்படிக் கூடச் செய்யலாமா என்ன?''

''சமயோசிதமாகக் காரியம் செய்யத் தெரியாதவன் இராஜாங்க தூதனாக இருக்கவே அருகனில்லை, தம்பி! இம்மாதிரி அபாயம் ஏதாவது நேரலாமென்று நான் எதிர்பார்த்தேன். எனவே, முன் ஜாக்கிரதையாகக் காரியம் செய்தேன். அதற்காகச் சக்கரவர்த்தியிடமிருந்து எனக்கு வெகுமதியும் கிடைத்தது.''

இதையெல்லாம் கேட்ட பரஞ்சோதியின் உள்ளம் பெரிதும் குழப்பத்துக்கு உள்ளாயிற்று. இரவில் விடுதிகளில் தங்க நேர்ந்தால், மற்றவர்கள் படுக்கும் அறையில் படுக்கக் கூடாது என்று புத்த பிக்ஷு எச்சரித்தது அவனுக்கு ஞாபகம் வந்தது.

நல்லவேளையாக அன்றிரவு படுத்துக் கொள்வதற்கு அவனுக்குத் தனி அறையே கொடுத்தார்கள். வஜ்ரபாஹுவும், ''தம்பி! இனிமேல் உன் வழி வேறு; என் வழி வேறு. நான் அதிகாலையில் எழுந்து போய் விடுவேன். உன்னை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. எப்போதாவது உதவி தேவையிருந்தால் என்னிடம் வரத் தயங்காதே!'' என்று சொல்லி விடைபெற்றுப் படுக்கச் சென்றான்.

பரஞ்சோதி படுத்துக் கொள்ளும் போது, வஜ்ரபாஹு கூறிய அனுபவம் அவனுக்கு ஞாபகம் இருந்தபடியால், அயர்ந்து தூங்கி விடக் கூடாது என்றும், ஏதாவது சத்தம் கேட்டால் பளிச்சென்று எழுந்து விட வேண்டுமென்றும் மனத்திற்குள் சங்கல்பம் செய்து கொண்டான். ஆனால், வாலிபப் பருவமும், நாளெல்லாம் பிரயாணம் செய்த களைப்பும் சேர்ந்து, படுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவனை நித்திரையில் ஆழ்த்தி விட்டன.

எனினும் அவனுடைய தூக்கம் அமைதியான தூக்கமாக இருக்கவில்லை. பயங்கரமான கனவுகள் மாறி மாறித் தோன்றிக் கொண்டிருந்தன. செந்நிறப் புரசம் பூக்கள் நிறைந்த பிரதேசத்தில் ஆவி வடிவத்துக் குதிரை வீரர்களுக்கு மத்தியில் தானும் ஓர் ஆவி வடிவமாகி ஓயாது சுற்றி அலைந்து கொண்டிருந்ததாக அவனுக்குத் தோன்றியது. அலைந்து அலைந்து களைத்துப் போன பிறகு ஒரு மலைக் குகையில் அவன் போய்ப் படுத்துக் கொள்கிறான். கனவிற்குள் தூங்குவதாகக் கனவு காண்கிறான்! ஆனால், அந்தத் தூக்கத்திலும் நினைவு இருந்து கொண்டிருக்கிறது. கண்கள் மட்டும் மூடியிருக்கின்றன. பிசாசுகள் ஒன்று மாற்றி ஒன்று வந்து அவனுடைய இடுப்பைத் தடவுகின்றன. 'நல்ல வேளை, ஓலை இடுப்பில் இல்லை. தலைக்கு அடியில் வைத்துக் கொண்டிருக்கிறோம்' என்று தோன்றுகிறது. கண்ணைத் திறந்து பார்த்தால் அந்தப் பிசாசுகள் ஓடி விடுமென்று அவன் எண்ணுகிறான். ஆனால், எவ்வளவு முயன்றும் கண்களைத் திறக்கவே முடியவில்லை.

அப்புறம் எங்கேயோ வெகு தூரத்தில் ஒரு கொள்ளிவாய்ப் பிசாசு காணப்படுகிறது. அதை அழைத்துக் கொண்டு ஒரு கரும் பிசாசு அவனை நோக்கி வருகிறது. அருகே, அருகே, அருகே அவை நெருங்கி வந்து கொண்டிருக்கின்றன! கொள்ளிவாய்ப் பிசாசின் வாயிலுள்ள தீயின் ஒளியினால் அவனுடைய மூடியுள்ள கண்கள் கூசுகின்றன. கடைசியில், அந்த ஒளியின் கடுமையைப் பொறுக்க முடியாமல் கண்ணிமைகள் திறந்து



கொள்கின்றன.

ஆனால், எதிரில் வந்தவை கொள்ளி வாய்ப் பிசாகம் இல்லை. கரும் பிசாகம் இல்லை என்பதை அவனுடைய திறந்த கண்கள் தெரிவிக்கின்றன. வீரன் வஜ்ர பாஹுவும், அவனுக்குப் பின்னால் கையில் விளக்கு ஏந்திக் கொண்டு அந்த விடுதியின் தலைவனுந்தான் வந்து கொண்டிருந்தார்கள்!

பரஞ்சோதி திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அவனுடைய வலது கை, அருகில் கிடந்த வேலைப் பற்றியது.

(தொடரும்)



# புல்வெளிப் பயணங்கள்

''எங்கேயடி...? அப்பாவைக் காணல்லே?''

''தோட்டத்திலே போய்ப்பாரு..படு மும்முரமாய்ப் புல் வெட்டியாறது!''

வேண்டுமென்றே, இவன் காதுகளில் விழட்டும் என்றே தாயும் மகளும் உரையாடுவது ஒன்றும் புதிதில்லை. இந்த வீட்டுக்குக் குடிவந்த நாள்முதல் வாடிக்கையாகி விட்ட ஒன்றுதான் இது. சீண்டுகிற தொனி அதில் வேண்டுமென்றே சேர்க்கப்பட்டிருக்கும்.

இவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். இன்னும் சற்றுப் பொறுத்தால், கையில் சுடச்சுடக் காப்பித் தம்ளரோடு தாயோ, மகளோ விரிந்து கட்டிக்கொண்டு வரக் கூடும்.

''உங்களுக்கு வேறெ பொழைப்பே இல்லியா? மழை வேறே தூறிண்டே இருக்கு... உடம்புக்குத்தான் ஆகுமா? சீக்கிரம் காப்பியைக் குடிச்சிட்டுத் தாங்கோ. அடுப்புலே என்னமோ தீய்ஞ்சு போறாப்பலே இருக்கு. உங்க பெண் அதையெல்லாம் எங்கே கவனிப்பா...?''

பாதி மிரட்டல், பாதி சிணுங்கல், கொஞ்சம் பரபரப்பு என்கிற மாதிரி அவள் விரைந்து இடம் பெயர்கிறாள். மழைத் தூறலில் நனைவதை விடவும் இதுபோன்ற சிணுங்கல் சீறல்களில் நனைவது இவனுக்கு மிகவும் பிடிக்கும்.

இலேசாக இருந்த மழைத்தூறல் இப்போது நன்றாக வலுத்தது. இனியும், மழை ஓய்கிறவரை, நிலத்தில் தண்ணீர் சற்று வடிகிற வரை — இவனால் புல்லைத் தொட முடியாது. நசநசவென்று கை கால்களெல்லாம் மண் மரமரத்தது. விரல் நகக் கண்களில் மணல் குருணைகள் ஏறி — ஆழமான ஒரு வேதனை.

இரண்டு மாதங்களாய் இப்படியே பொழுது போகிறது. உடல் நலம் சீராக இல்லை என்று அலுவலகத்துக்கு லீவு போட்டு விட்டு வந்தாகிவிட்டது. இனி மேல் அடுத்த 'காவடி' எங்கேயோ? கவர்ச்சியான அரசாங்க உத்தியோகம் என்று 'வேர் பிடித்து' முப்பது ஆண்டுகளான பின்னரும் நிலையாக ஓரிடத்தில் இருக்க முடியாமல் பெட்டி தூக்க நேர்கிறது.

லீவு முடிந்து மீண்டும் பணியேற்க உத்தரவு வரும் போது சமாளித்தாக வேண்டிய எத்தனையோ பிரச்னைகளை இப்போதே நினைத்து என்ன பயன்? இங்கே தோட்டத்தில் புல் களைவதில் உள்ள நிறைவு கூட அலுவலகக் குப்பைகளோடு புழங்குவதில் கிடைப்பதில்லை என்பது இவனுடைய இப்போதைய கணிப்பு. ஆனால் அலுவலகத்துக்குப் போய் வேலையில் மூழ்கிவிட்டால் அதுதான் சுகம், சொர்க்கம் எல்லாம்!

ஏதோ ஒரு நிர்ப்பந்தத்தில் அரசாங்க வீட்டை விட்டு வெளியே வந்தாகி விட்டது. அவசரத் தேவைக்கு இந்த வீடு கிடைத்தது. வாடகை கைக்கு மீறியதாக இருந்தாலும் வீடும், சுற்றிலும் இருந்த புல்வெளியும் இவனுடைய மனசுக்கு மிகவும் பிடித்துப் போயின. நகரச் சந்தடிகளில், அடுக்கு மாடித் தீப்பெட்டி அறைகளிலேயே புழங்கி வந்த காலம் போய், இப்படி ஒரு சொகுசான வீட்டை இவன் சொந்தத்தில் கட்டியா அனுபவிக்கப் போகிறான்? வாடகை வீடே இவனுக்குப் படு உற்சாகமாக இருந்தது.

அநாவசியமான அடைசல் இல்லாமல் தோட்டம் துப்புரவாக இருக்கட்டுமே என்கிற ஆசையில், நேரம் கிடைக்கிறபோதெல்லாம் இப்படிப் புல் களைந்தாகிறது.

கூலிக்குப் புல் அறுக்கிறவங்களை விட்டால், பத்தோ இருபதோ கூலியும் வாங்கிக் கொண்டு 'நுனிப்புல்' அறுத்துவிட்டுப் போவார்கள். புல் கட்டோடு அவர்கள் வெளியேறும் முன்பே, இங்கே வேர் சிலிர்த்து மறுபடி முளைத்துத் துளிர்விடும்.

ஈரம் உலராத மழை மண்ணில், வேர் அறுந்து போகாமல், கொத்தாகப் புல் கைக்கு வரும். கொஞ்சம் தரை ஈரம் உலர்ந்து விட்டாலும், மண் கெட்டிப் பட்டு விடும். வேர் அசைந்து கொடுக்காது. புல் மட்டும் அறுந்து கைக்கு வரும். மண்ணுக்கும் வேருக்கும் அப்படியொரு நெருக்கமான சிநேகம். மழைத் தூறல் தருகிற சந்தோஷத்தில் பூமி சற்றுக் கண்ணயர்ந்து விடுமோ என்னமோ! ஒரு லாகவமான அசைப்பில் மண் நெகிழ்ந்து கொடுக்கும்.

இவன் ஒருநாள் சொன்னான். ''பால்கார அம்மாவுக்குச் சொல்லி அனுப்பேன். இவ்வளவு புல்லும் வீணாகப் போகிறதே..

சப்ரபாலவன்

மாட்டுக்காவது போடட்டும்.''

''உங்களுக்கு முன்னாடியே கேட்டாச்சு! வேர் மண்ணோட இருந்தாப் புல்லை மாடு தின்னாதாம்.. வேண்டாம்னு சொல் லிட்டா.''

சுவரொட்டிக் காகிதம் மேய்கிற நகர்ப் புறத்து மாடுகளை நினைத்துக் கொண்டான். இந்த மாடுகளுக்கு இவ்வளவு நாக்கா என்று வியப்பாக இருந்தது. புல் மேயும் மாடுகள் பற்களால் கத்திரித்துக் கடைவாயில் அரைத்து விழுங்குகிற நேர்த்தி இவனுக்குத் தெரியும். வேரோடு பறிக்காமல், கத்திரித்து விழுங்கும் போது, புல் புதிது புதிதாக முளை விடுமே!

புல் அறுப்பதில், புல் வளாப்பதில் ஒரு பிஹெச்.டி. வாங்குகிற அளவுக்கு இவனுக்கு ஞானம் வந்துவிட்டது. எத்தனை விதமான புற்கள்! சிலந்தி வலை பின்னுகிற மாதிரி! அருகம் புல், கோரைப் புல் என்று ஒன்றிரண்டு 'பிரபல'ங்களுக்கு மட்டும் 'ஜாதி' தெரிகிறது. அப்புறம் — சூரியன் தன் கூரிய கிரணங்களைப் பரப்பு கிற மாதிரி, 'கைகளை' வட்டமாகப் பரப்பி வெள்ளைப் புள்ளிகளாய்ப் பூத்துச் சிரிக் கிறதே — அது என்ன ஜாதி? சூரியப் புல் என்றே பெயர் வைத்து விடலாமா? மயிர்க் கொத்துப்போல் சன்ன இழைகளாக ஒரு புல். இவற்றுக்கெல்லாம் விதை எப்படி? விதை உறக்கம் எவ்வளவு காலம்?

எவ்வளவு கடுமையான வறட்சிக்குப் பின்னும், புல்லின் அடியில் மறுபடியும் புல் என்று, 'சந்ததி இழை' அறுந்து போய் விடாமல் இனத்தைக் காப்பாற்றிக் கொள் கிற அறிவு — அல்லது சாமர்த்தியம், மனிதர் களைக் கூட அற்பமானவர்களாக்கி விடு கிறது!

புல் பறிக்கும் நேரங்களில் இவனுக்கும் புல்லுக்கும் இடையே சுவாரசியமான 'ஸம் வாதமே' நிகழ்வதுண்டு. புல் பேசுமா? அதென்னமோ தெரியாது. இவன் புல் லோடு, மரஞ் செடி கொடிகளோடு எல்லாம் மணிக்கணக்கில் அமர்ந்து பேசு வான். சுற்றியிருப்பவர்களைப் பற்றி, 'இருப் பவை' களைப் பற்றியெல்லாம் இவனுக்கு அக்கறையில்லை.

''என்னைப் பறித்து வீச..... என் 'குலத்தை' நாசப்படுத்த உனக்கு என்ன





''அவர் போலி டாக்டர்னு எப்படிச் சொல்றீங்க?''

''தலையைச் சுற்றுது டாக்டர்னு சொன்னால், எந்தப் பக்கமாச் சுத்துதுன்னு கேட்டாரே?''

— சீர்காழி வி. ரேவதி.

உரிமை இருக்கிறது?'' என்று புல் கோபிக்கும்.

''நீ அவசியமில்லை... இடத்தை அடைக்கிறாய்... பூச்சிப் பொட்டுக்களுக்கு இடந் தருகிறாய்... உன்னை அகற்றிவிட்டு ஏதாவது பூச்செடி, காய்கறி என்று பயிர் செய்யலாம் என்று....''

''நான் அவசியமில்லை என்று தீர்மானிக்க நீ யார்? நீ தேவையில்லை என்று நாங்கள் எப்போதாவது உன் வட்டுக்கு வருகிறோமா?'' பறிக்கப்பட்டு இவன் கையில் இருந்து கொண்டே அந்தக் கொத்துப் புல் கேட்கும். இவன் பல நேரங்களில் இதுபோன்ற 'அற்பக்' கேள்விகளால் திணற வேண்டியும் இருக்கும்!

சமயங்களில் அற்பப் புல்லுக்கும் கூடக் கணிசமான ஆதரவாளர்கள் உண்டு என்பது இவனுக்குத் தெரியும். புல்லின் வேரடியில் சுருண்டு படுத்துக் கிடக்கும் சின்னஞ் சிறிய கரிவளைப் பூச்சிகள் இவனைத் திட்டித் தீர்க்குமோ? புல் அகற்றப் பட்டதும் 'மௌனமாக' நகர்ந்து போய் வேறு கல் இடுக்குகளில் மறைந்து கொள்ளும். எதிர்ப்பு ஏதும் காட்டத் தெரியாமல், 'இதுதான் நம் விதி' என்று வாக்களித்த பின் சுருண்டு படுத்துக் கொள்கிற ஜென்மங்கள் மாதிரி இதுவும் என்று இவன் நினைத்துக் கொள்வான்.

ஆனால் இந்தக் கரிவளைப் பூச்சிகளுக்குக் கூட மிகவும் உக்கிரவாதம் நிறைந்த பாதுகாப்புப் படை உண்டு!

எதிர்பாராத நேரத்தில் கள் எறும்புகள் மொலு மொலுவென்று கிளம்பி அரை நிமிட நேரத்தில் இவனைத் திணறப் பண்ணியதை ஜென்மத்துக்கும் மறக்கமாட்டான். புற்களின் வேரடியில் உறங்கும் கரிவளைப் பூச்சிகள் ஆதரவற்றவை இல்லை என்பது அன்றுதான் இவனுக்குப் புரிந்தது.

மழைத்தூறல் இப்போது முற்றிலுமாய் ஓய்ந்து போனது. வானம் திட்டுத் திட்டாக முகங்காட்டிச் சிரித்தது. இவன், மறுபடியும் தோட்டத்தில் 'புல் மேயப்' போகலாம் என்று கால்களுக்கு உத்தரவு கொடுக்கத் தவித்த போது அடுக்களை சாம்ராஜ்யத்திலிருந்து ஆணை பிறந்தது.

''அடி... யேய்....! உன்னைத்தான்! உங்க அப்பாவிடம் சொல்லு... இன்னிக்கிச் சாயங்காலம் டாக்டரைப் பார்க்கப் போகணும். பல்வலி தாங்கவே முடியல்லே.... படுத்துண்டுட்டேன்னா இங்கே யார் இருக்கா... அடுக்களையிலே புழுங்கறதுக்கு?''

இது ஒரு நிரந்தர அடிமைத்தனம். புறப்பட்ட கால்களைக் கட்டிப் போட முயன்றான். கேவலம், புல் பறிக்கப் போகக் கூடச் சுதந்திரம் இல்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா?

''இவளுக்கு நிஜமாகவே பல்வலியா? இல்லை ஒப்புக்கு எதையாவது சொல்லி அனுதாபம் பெற எண்ணுகிறாளா?'' என்று சந்தேகம் வரும். ஆனால் ஒருபக்கத்துக் கன்னமும் வீங்கின மாதிரி இருப்பதைப் பார்க்கும் போது இவனுக்குப் பாவமாகவும் இருக்கும். அவளும் ஒருமாதமாகச் சொல்லி அலுத்து விட்டாள். இப்போது மகள் மூலம் 'அயல் மொழி' ஒலிபரப்பு நடக்கிறது.

''இன்னிக்குக் கண்டிப்பா அழைச்சுண்டு போறேன்னு சொல்லும்மா... டாக்டர் ஆறரை மணிக்குத்தானே வருவார்....''

''அது வரைக்கும் வீட்டிலே சும்மா இருக்கலாகாதா? மழை ஈரத்திலே மறுபடியும் போய் அலையணுமான்னு கேளு..''

அதற்குமேலும் புல்வெளிப் பயணம் சரி என்று இவனுக்குப் படவில்லை. காலை முதல் பறித்து வீசப் பட்ட புல் போராகக் குவிந்து கிடந்தது. இனிமேல் அதற்கு அடியிலும் புழு பூச்சிகள் ஏதாவது 'குடி புகுந்து' மிரட்டலாம். புல் மலையை எடுத்துத் தெருவோரக் குப்பைத் தொட்டியில் போடலாம் என்று தோன்றியது. ஒரு 'கவளம்' புல்லைக் கையில் எடுத்த போது மீண்டும் அவள் குரல்!

''உங்க பொக்கிஷத்தை யாரும் கொள்ளையடிச்சுண்டு போயிடமாட்டா. பேசாம உள்ளே வாங்கோ. சின்னவ பாடத்திலே என்னவோ சந்தேகமாம். அப்பாகிட்டக் கேளுடின்னு சொன்னேன். அதையாவது கவனியுங்கோ.''

வேண்டா வெறுப்பாகச் சின்னவள் புத்தகத்தை எடுத்துக் கொண்டு வருகிறாள். தலைமுறை இடைவெளியின் விசுவரூபம்.

''அப்பாவுக்கு வீட்டு நினைப்பெல்லாம் ஏதும்மா... அவர்... அவர் புஸ்தகம்... சினேகிதர் வீடு — இப்போப் புதுசா வந்திருக்கு தோட்டத்திலே புல் வெட்டறது...''

— நிஜமாகவே அவளுடைய பாடப் பிரச்னை தனக்குப் புரியவில்லை என்று














**டார்டாய்ஸ்** கொசு
**வர்த்திச் சுருள்**






தயாரிப்பாளர் : பாம்பே கெமிக்கல்ஸ் லிமிடெட்
பம்பாய்-400 023. ஃபோன் : 273831.

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள் : சாந்திலால் பிரதர்ஸ், 7, காசி செட்டி லேன் : 2 வது மாடி, சென்னை — 600 079. ஃபோன் : 569986/560414/569826.

## சிரிக்க வையுங்கள்: சிங்கப்பூர் செல்லுங்கள்!

பால் பாயிண்ட் பேனாவைக் கொண்டு கீழே யுள்ள வெற்றிடத்தில் ஒரு ஜோக் அல்லது சிரிப்புத் துணுக்கு எழுதி அனுப்புவதுதான் உங்கள் வேலை. அடுத்த ஆகஸ்டு வரை நடைபெறவுள்ள இப்போட்டியில் பிரசுரமாகும் எல்லாத் துணுக்கு களுக்கும் சன்மானம் உண்டு. யாருடைய ஜோக் அதிக எண்ணிக்கையில் பிரசுரமாகிறதோ, அவர் ஜோடியாகச் சிங்கப்பூர் போய்வரலாம்! கல்கிக்குப் பேட்டி தரலாம்! 'சிரிப்பு-சிங்கப்பூர்' என்று உறையின் மீது குறிப்பிட்டு, துணுக்கை அனுப்ப வேண்டும். கடைசித் தேதி: 26.11.90.

ஜோக்/துணுக்கு:

என் பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................

..........................

## கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்




கை விரித்த போது வெளிப்பட்ட விமர் சனம் அது.

வர வர நாமே புல் ஆகிக் கொண்டிருக் கிறோமோ என்று கூட இவனுள் ஒரு தாழ்வு மனப்பான்மை வசதியாக மையம் கொண் டது.

**வா**சலில் கேட்ட சைக்கிள் மணி ஒலியைத் தொடர்ந்து உள்ளே பறந்து வந்து விழுந்தது கடித உறை.

அவனுடைய அலுவலகத்திலிருந்து வந்த கடிதம் தான். திருநெல்வேலியில் பணி யாற்றி லீவில் வந்திருந்தவன், திருச்செங் கோட்டுக்கு மாத்தப்பட்டதாகக் கூறியது அந்தச் சம்பிரதாயமான 'ராஜ ஓலை'!

இவன் மறுபடியும் பெட்டியைத் தூக்க வேண்டும். இன்னும் ஒரு இருபத்து நான்கு மணி நேரமாவது ஓய்வு கொண்டு விட்டுப் புறப்பட வேண்டும். ஈஸிச்சேரில் அமர்ந்து கொண்டு கூரையைப் பார்க்கிறான். சுற்றி லும் மனைவியும், குழந்தைகளும்.

சற்று முன் அங்கே பரவியிருந்த கிண்டல், உரிமையோடு கூடிய சீண்டல் அலைகள், சீற்றங்கள் எல்லாம் தூசுப்படல மாய், மெதுவே இறங்கி அடங்கியிருந்தன. ஒரு நேசமான அமைதி விளக்கேற்றியிருப் பது போல் ஒரு பிரமையில் இவன் நெகிழ்ந் தான்.

"இப்பவும் உங்களுக்கு மெட்ராஸ் மாறு தல் கிடைக்கல்லியாப்பா... மறுபடியும் அவ் வளவு தூரம் — திருச்செங்கோடுதான் போகணுமா... யாரையாச்சும் பார்த்துக் கேட்கப் படாதா..?"

கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தவன் இப்போது மெல்லப் பார்வையை இறக்கி, கேள்வி கேட்ட மகளைப் பார்க்கிறான். சிரிப்பு வருகிறது.

தோட்டத்தில், புல் மலையை அள்ளி அகற்றும் முயற்சியில் மனைவி முழுவது மாய் ஈடுபடுகிறாள். அவளுடைய பல்வலி நினைவுக்கு வருகிறது.

திருச்செங்கோடு, சேலம் என்று மறுபடி யும் போய்விட்டால் என்ன ஆகும்? குடும் பத்தை விட்டு மறுபடியும் அவ்வளவு தூரம் வெளியே போய்ச் சாமியார்த் தனமாக எத்தனை வருஷம் குப்பை கொட்டுவது?

எல்லாவற்றையும் விட, இவன் போய் விட்ட சந்தோஷத்தில் தோட்டத்தில் புல் படு சந்தோஷமாக வளர்ந்து புதராக மண்டி விடப் போகிறது.

அடுத்த முறை இவன் சென்னைக்கு வரும் போது —

கரிவளைப் பூச்சிகளும், எறும்புச் சாரை களும், கூரியப் புல்களும் இவனை எப்படி வரவேற்கும்?



# சரியான வகையில் கட்டப்பட்ட ஒரு வீட்டிற்கு சிறந்த முறையில் அமைக்கப்பட்ட ஒரு தண்ணீர்த் தொட்டி தேவை



**கும்மடி பாலிமேர்ஸ் தயாரிக்கும்
ஜி & பி தண்ணீர்த் தொட்டிகள்
மற்றும் மேல் மட்டத் தொட்டிகள்**

இந்தியாவில் தயாராகும் தண்ணீர்த் தொட்டிகளில் ஜி & பி தொட்டிகள் மட்டுமே தூய்மையான (ஃபுட் அண்ட் ட்ரக் அட்மினிஸ்ட்ரேஷன் ஆஃப் யு.எஸ்.ஏ வின் அங்கீகாரம் பெற்ற) உயர்ரக பிளாஸ்டிக்கில் தயாரிக்கப்படுபவை. போட்டி மலிந்த இவ்வுலகில் இதர தயாரிப்புகள் மறு உபயோகப்படுத்தப்படும் பிளாஸ்டிக்கில் தயாராகின்றன. உண்மையை உணரும் உங்கள் திறமைக்கு எடுத்துக்காட்டாக, பெருமிதமாக உங்கள் வீட்டில் ஒரு ஜி & பி தொட்டியை நிறுவுங்கள்.




ஜி & பி தரத்தில் உயர்ந்தது.
உறுதியானது.

கும்மடி பாலிமேர்ஸ் (பி) லிமிடெட்.,
33, ஹபிபுல்லா சாலை சென்னை-600 017.
தொலைபேசி: 866241/474349
டெலெக்ஸ்: 041-7099 IMK IN




ஜி & பி தண்ணீர்த் தொட்டிகள்
வற்றாத நீர் ஊற்றுகள்

உங்கள் அருகாமையில் உள்ள அங்கீகாரம் பெற்ற G&P டீலரை அணுகவும்.

---

# Tramcoir

மிதியடிகள்



தூசிகள் இங்கு நிறுத்தப்படுகிறது.

எல்லா **Kurl-on** டீலர்களிடமும் கிடைக்கும்.



# அவள் ஒரு மாதிரிதான்!

போட்டிக் கதை — 9

தன்யா அதைக் கொஞ்சமும் எதிர் பார்க்கவில்லை. நேற்று மகேஷ், ''ஸ்கூட்டரில் கேப் போய் வருவோமா?'' என்ற போது திகைப்பாய்த் தான் இருந்தது. காலையில் போய்ச் சாயந்தரம் இருட்டறதுக்குள்ளே திரும்பிவிடலாம் என்றதும் திரில்லிங்காகத் தான் தோன்றியது. சும்மா ஒரு பிக்னிக் தானே? காதலன் விரும்பி அழைக்கும்போது அந்தத் இருட்டு சுகத்தை – கடற்கரை மணலில் காதலனுடன் கை கோத்து அலையில் கால் நனைத்து உலாவருவதை – கொஞ்சம் அனுபவிப்பதில் தவறேதும் இல்லை என்று நினைத்துத்தான் 'ஓகே' சொன்னாள். ஆனால் திரும்பி வரும் வழியில் ஸ்கூட்டர் இப்படி திடீரென்று நின்று போய்க் காலை வாரிவிடும் என்று அவள் எதிர்பார்க்கவேயில்லை.

''என்ன ஆச்சு மகி உன் ஸ்கூட்டருக்கு?'' என்று தன்யாவின் குரலில் பதற்றம் கொட்டியது.

''அது தெரிஞ்சாத்தான் சரி பண்ணி விடுவேனே?'' என்றான் பிளக்கைக் கழற்றி மூன்றாவது தடவையாகக் கிளீன் செய்து கொண்டிருந்த மகேஷ். பொருத்திவிட்டு உதைத்துப் பார்த்தான். ஊஹூம். அது மசியவில்லை.

''பொழுது வேறே இருட்டியாச்சு. இப்படி நட்டநடுப் பாதையிலே கொண்டு விட்டிட்டீங்களே? இப்ப நான் எப்படி நேரத்துக்கு ஊர் போய்ச் சேர்ந்து எப்படி

எங்கப்பாவை...''

''இரு. இரு. நீ வேறே அழ ஆரம்பிச்சுடாதே. நான் என்னென்னமோ செய்து 'ஸ்டார்ட்' பண்ணிவிடுவேன். ஆரீஸ் தோழிகளோடு பிக்னிக் போய்விட்டு வரேன்னு தானே வீட்டிலே சொல்லியிருக்கே? அதனால் அவங்க ஒண்ணும் கலவரமாயிடமாட்டாங்க....'' என்று எடுத்துச் சொல்லத் தன்யா வாயை மூடிக் கொண்டாள்.

அப்புறம் அவன் அந்த 'என்னென்னமோ'வை ஒவ்வொன்றாகச் செய்து பார்த்தான். நேரம்தான் நகர்ந்தது; ஸ்கூட்டர் நகரவில்லை.

தன் பைக்கை நிறுத்தி உதவி செய்யப் புகுந்த வழிபோக்கரும் உதட்டைப் பிதுக்கி விட்டுப் போய்விட்டார்.

''இப்ப என்ன பண்றது? எனக்குப் பயம்மா இருக்கு.''

''கவலைப்படாதே! ஏதாவது காரை நிறுத்தி லிப்ட் கேட்டுப் பார்ப்போம்.''

எத்தனையோ கார் கடந்து சென்றது. அந்த ராத்திரியில் அந்த இடத்தில் இவர்களை நம்பி வண்டியை நிறுத்தி விசாரிக்கத் துணிவுள்ளவர் ஓட்டிச் சென்ற வண்டியாகத்தான் எதுவும் இருக்கவில்லை.

தன்யாவுக்குப் பயத்தில் உடல் நடுங்க ஆரம்பித்தது. மனசுக்குள் விசுவரூப அப்பா வந்து போனார். அடுத்த வீட்டுக்குக் கேட்கும்படி அழுது அரற்றும் அம்மா.... தருணம் பார்த்து வத்தி வைக்கும் தம்பி... என்ன சொல்வது அவர்களிடம்?

விதம் விதமான பதில்களை மனம் ஒரு பக்கம் தயாரித்துக் கொண்டிருக்க, மகேஷுடன் சேர்ந்து ஒவ்வொரு காராக நிறுத்திப் பார்க்க, கை ஒரு பக்கம் இயங்க...

''எனக்கு ஒரு யோசனை தோணுது தனு. நீ கோவிச்சுக்க மாட்டேன்னா சொல்றேன்.''

''என்ன, சொல்லுங்க.''

''இந்த இடத்தில் இதுக்கு மேலும் நின்னுட்டிருக்கிறது நமக்கு நல்லதில்லை. வர்ற போது கடைசியா நாம் ஒரு ஹோட்டலைத் தாண்டி வந்ததாக கவனிச்சியா? நூறு கஜம் தான் இருக்கும். அங்கே போய் விட்டால் டவுனுக்குப் போன் செய்து மெகானிக்கை வரவழைச்சு வண்டியைச் சரி பண்ணிடலாம்.''

''போன் பண்ணினால் மெக்கானிக் வருவானா?''

''எதற்கும் முயற்சி பண்ணலாம். இல்லையா? வரலைன்னாலும் பிரச்னையில்லை. அங்கே நம் ஏதும் காலியிருந்தால் தங்கிட்டு...''

''என்னது?''

''பாரு தனு. உங்கப்பாவிடம் சம்மதம் வாங்கி விட முடியும்னு உனக்கு நம்பிக்கை இருக்கு. எங்க வீட்டிலே நான் ஏற்கெனவே வாங்கிட்டேன். இன்னிக்கோ நாளைக்கோ நமக்குக் கல்யாணம். இதுக்கு மேலும் நீ என்னோடு தனியே தங்க இப்படிப் பயந்தாயானால் எப்படி? தாலி கட்டின அடுத்த நிமிஷத்திலேயிருந்து உனக்கு நான் தானே பாதுகாப்பு? அதுக்கு முந்தின நிமிஷம் வரை என்கிட்டேயிருந்தே பாதுகாப்பு வேணுமாக்கும்?''

''எனக்கு ஒண்ணும் புரியலே மகி.'' தன்யா வெகுவாகக் குழம்பியிருந்தாள்.

அவளைப் பொறுத்தவரையில் மகேஷை அவனுடைய ஜென்டில்மென் தனத்துக்காகவும் சேர்த்துத்தான் காதலித்தாள். இப்போது மட்டும் அதைக் கழற்றிக் கொண்டு பார்க்க முடியவில்லை.

''சரி, நடங்க,'' என்றாள்.

**லா**பியில் அவளை உட்காரவைத்து விட்டு மகேஷ் ரிசப்ஷனிஸ்டிடம் அனுமதி வாங்கி மெக்கானிக்குக்குப் போன் செய்தான். சோகத்துடன் திரும்பி வந்து இவளிடம், ''மெக்கானிக்வொர்க்ஷாப்பைப் பூட்டிக் கொண்டு போய்விட்டான்.'' என்றான். ''ரூம் எடுத்துவிடட்டுமா?'' என்று கேட்டான் தயங்கித் தயங்கி.

தலையசைப்பதைத் தவிர வேறு வழி இருக்க வில்லை அவளுக்கு. மகேஷ் போனான்.

அப்போதுதான் அந்தப் பெண்ணைப் பார்த்தாள் தன்யா.

லாபிக்கு எதிர்த்தாற்போலிருந்த வரிசையில் முதல் அறைக்கதவு திறந்திருக்க உள்ளே அமர்ந்திருந்தாள் அந்தப் பெண். இவர்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையையும் கவனித்துக் கொண்டு.

இருபத்தி நாலு வயது இருக்கும். தலை நிறைய மல்லிகைப்பூ வைத்துக் கொண்டு, குறுகுறுவென்று விழித்துக் கொண்டு அமர்ந்திருந்தாள்.

ஒரு நிமிடம்தான். அதற்குள் மகேஷ் சாவியுடன் வர, அடுத்தாற்போல் இருந்த 107 ஐத் திறக்க இவர்கள் உள்ளே சென்று விட....

ஒரு நிமிடம்தான் என்றாலும் தன்யாவின் மனத்தில் ஆழமாய் விழுந்துவிட்டது அவளது பரிதாபமான, எதையோ எதிர்பார்த்த முகம்.

ரூம் சின்னதாகக் கச்சிதமாக இருந்தது. உள் அலங்காரத்தில் ஒரு மேதாவித்தனம்

கே.பி.ஜனார்த்தனன்

தெரிந்தது. அன்றைக்குச் சாயங்காலம் பூத்த மலர்கள் மேஜையை அலங்கரித்தன.

''ஹூம், நம்முடைய முதலிரவுக்கு இப்படி ஒரு நல்ல அறையில் தங்க வேண்டும்என்று நினைத்தேன்,'' என்றான் மகேஷ்.

''ஆமா, வேறே டாபிக் இல்லை உங்களுக்குப் பேச...''

ஆனாலும் பேச்சு எங்கே போனாலும் சுற்றிச் சுற்றி அதிலேயே வந்து நின்றது.

அந்த அறையின் அழகு, சுகமாய் நாசியை வருடிய சுகந்தம், ஏ.சி.யின் இதமான குளிர், அவனின் அருகாமை எல்லாமாகச் சேர்ந்து மெதுவே அவளைத் தன் சூழ்நிலையை மறக்க வைக்க முயல....

அதற்குள் யாரோ தடதடவென்று கதவைத் தட்டினார்கள். திறந்தால், எதிரில் அந்தப் பெண்!

''என்னைக் காப்பாத்துங்க சார்! என்னைக் காப்பாத்துங்க சார்!'' என்றாள் அவள் மகா பதற்றத்துடன். நன்றாகக் கலைந்திருந்தாள்.

மகேஷ் மலங்க மலங்க விழித்தான். தன்யாவும் பதறிப் போனாள்.

அவள் லேசாய் விக்கலுடன் கூடிய அழுகையில் சொன்னாள். ''சார்... நான் பக்கத்து ரூம்... என் கூடத் தங்கியிருக்கிற ஆள்கிட்டேயிருந்து எப்படியோ தப்பிச்சு வர்றேன். ஒரு வேலை வாங்கித் தர்றேன்னு என்னை அந்த ஆள் திருவனந்தபுரத்துக்கு அழைத்து வந்தார். அந்தக் கம்பெனி எம்.டி இங்கே தங்கியிருக்கிறதாகச் சொல்லி என்னை இங்கே அழைச்சுக்கிட்டு வந்து... வந்த இடத்தில் என்னைப் பலவந்தமா.... பலவந்தமா... உங்களைப் பார்த்தா நல்லவங்க மாதிரி தெரியுது. என்னை எப்படியாவது காப்பாத்தி எங்கப்பாவிடம் சேர்த்திட்டீங்கன்னா உங்களுக்குக் கோடி புண்ணியம்....'' என்று கை கூப்பினாள்.

சூழ்நிலை ஜீரணமாகாமல் மகேஷ் திகைத்து நிற்க... தன்யா உந்தினாள். ''ஏதாவது செய்யுங்க மகி!''

அதற்காகவே காத்திருந்த மாதிரி அவள் சட்டென்று உள்ளே நுழைந்து கதவைச் சாத்தினாள்.

''இன்னிக்கு ஒரு ராத்திரி மட்டும் என்னை உங்களோடு இங்கே தங்க அனுமதியுங்க. நாளைக்குக் காலையில் நான் பஸ் ஏறி எங்கப்பாகிட்டே போய்ச் சேர்ந்திடுவேன். இன்னிக்கு ஒரு ராத்திரி மட்டும்... ஏதோ இந்தத் துரதிர்ஷ்டம் பிடிச்சவளுக்கும் துளி கடவுள் அனுக்கிரகம் இருக்கப்போய்த் தான் உங்களை நான் சந்தித்தது.''

''ஆமா, நீ சொல்றதெல்லாம் உண்மை தான்கிறதுக்கு என்ன ஆதாரம்?'' என்று மடக்கினான் மகேஷ்.

''இத பாருங்க,'' என்று அவள் முழங்கையைக் காட்டினாள். அப்போதுதான் ஏற்பட்டிருந்தது அந்த சூட்டுத் தழும்பு. ''சிகரெட்டால் சுட்டாருங்க அவருக்கு இணங்கச் சொல்லி.''

பொறுக்க முடியவில்லை தன்யாவால். ''அழாதேம்மா, உனக்கு ஓர் ஆபத்தும் வராமல் பார்த்துக்கறோம்.''

''தன்யா!''

''பரவாயில்லை மகி, ப்ளீஸ் எனக்காக.''

அதற்குள் மீண்டும் யாரோ கதவைத் தட்டினார்கள்.

அந்தப் பெண் மருண்ட பார்வையை அங்குமிங்கும் ஓட்ட, தன்யா அவளை இழுத்துச் சென்று குளியலறைக்குள் விட.... எல்லாம் ஓர் இயல்பான கதியில் நடந்தன. கதவைத் திறந்தபோது உயரமாய் எதற்கும் கவலைப்படாத முகத்துடன் ஓர் ஆள் நின்றிருந்தான். ஜிப்பா, கயிறு சைஸில் கழுத்தில் செயின். சென்ட் வாசனை!

''இங்கே ஒரு பொண்ணு ஓடிவந்ததா?''

ஓ, இவன்தான் அவள் சொன்ன ஆளா? தன்யாவுக்கு அடித்துக் கொள்வது தன் இதயம் தானா என்று சந்தேகம் ஏற்பட்டது. ஓர் இரவுக்குள் அடுக்கடுக்காய் எத்தனை சம்பவங்கள் அவளது வாழ்வில்!

மகேஷின் கையை அழுத்தினாள். ''இங்கே யாரும் வரவில்லை,'' என்றான் அவன்.

''இதோ பாருங்க தம்பி, அவ இந்த அறைக்குள்ளே நுழைஞ்சதைப் பார்த்திட்டுத் தான் கேட்கிறேன். அவள் சொன்னதை நம்பாதீங்க. அவ ஒரு மாதிரி. முந்நூறு ரூபாய் அட்வான்ஸா இப்பதான் புரோக்கரிடம் கொடுத்து அனுப்பினேன்.''

''சார், நீங்க சொல்ற மாதிரி அவள் ஒரு மாதிரி பெண்ணாய் இருந்தால் அவள் உங்களை விட்டு ஓடிவர வேண்டிய அவசியம் இல்லை. பிடிக்காமல் ஓடிவந்திருந்தா அவ எப்படிப்பட்டவளாக

''ஏண்டா... நாம 'டிகிரி' வாங்கினதாலே என்ன பிரயோஜனம்...?''

''ஏன், 'வேலையில்லாப் பட்டதாரி'ன்னு சொல்லிக்கலாமே...!''

— ஏ. ஆர். வீரராகவன்.



''நீங்க புதுசா எடுத்திருக்கிற படத்துக்கு என்ன பேரு வைச்சிருக்கீங்க?''

''என்ன சார், கிண்டலா?''

''படத்தின் பேரைத்தானே கேட்டேன். எதுக்கு சார் என்னைக் கோபிக்கிறீங்க?''

''படத்தின் பேரைத்தானே நானும் சொன்னேன்!''

— மல்லிகை மன்னன்.



இருந்தாலும் துரத்தறது பலாத்காரம் தான்." என்றான் மகேஷ்.

''ஓஹோ நீ எனக்குப் புத்திமதி சொல்றியா? நான் யாருன்னு உனக்குத் தெரிய வைக்கிறேன்!'' என்று கூறிவிட்டுப் போய் விட்டான் அவன்.

கதவைச் சாத்திவிட்டுத் திரும்பிய மகேஷின் முகம் அடியோடு மாறியிருந்தது. ''இத பாரும்மா, உன்னால் எங்களுக்குப் பிரச்னை ஏற்படணுமா? அந்த ஆள் பேசி விட்டுப் போறதைப் பார்த்தால் ஏதோ பெரிய புள்ளி மாதிரி தெரியுது! உன்னைப் பத்தி அவன் சொல்றதைக் கேட்டா...''

''சார், அவன் சொல்றது முழுப்பொய்." தன்யாவின் கையைப் பிடித்துக் கொண்டாள் அவள். ''அம்மா, உன்னை என் தங்கச்சியா நினைச்சுக் கேட்கறேன். என்னை இந்த ஆளிடம் மாட்டிவிட்டிடாதேம்மா. நாளைக்குக் காலையிலே நான் பஸ் ஏறிப் போய்விடுவேன். இன்னிக்கு ஒரு ராத்திரி மட்டும் என்னை உன் பார்வையிலேயே வெச்சுக்கம்மா.''

தன்யாவுக்குச் சற்று இளகின மனசு. சுத்தமாக வயப்பட்டிருந்தாள். மகேஷ் வாதாடிப் பார்த்தான். அவன் ஏற்றுக் கொள்ளவில்லை. ''நான் சொல்றேன் மகி, அவள் இருக்கட்டும். என்ன ஆனாலும் பரவாயில்லை.''

''எனக்கென்னமோ இது சுத்தமா பிடிக்கலை,'' என்றவன் கோபத்தோடு சென்று ஒரு பெட்ஷீட்டை எடுத்துத் தரையில் விரித்துப் படுத்துக் கொண்டான்.

'பாவம், ரொம்ப ஆசையாய் வருங்கால மனைவியுடன் உல்லாசமாய்ப் பொழுதைப் போக்க எண்ணியிருப்பான். ஏமாற்றம் தாங்கக் கூடியதா என்ன? இருக்காதோ கோபம் பின்னே?' என்று நினைத்துக் கொண்டாள் தன்யா.

அந்தப் பெண்ணை ஒரு கட்டிலில் படுக்கச் சொல்லி விட்டுத் தானும் ஒரு கட்டிலில் சாய்ந்தாள்.

கண்ணை மூடவில்லை.

டொக் டொக் என்று கதவில் சப்தம். ஏதோ ஸ்டிக்கால் தட்டுவது மாதிரி.

''போலீஸ் தட்டறோம். கதவைத் திறங்க."

போலீஸ்! தன்யா உறைந்தாள். அந்தப் பெண்ணைப் பார்த்தாள். அவள் பரிதாபமாய் விழித்தாள். அதற்குள் கதவைத் திறந்தான் மகேஷ்.

''இங்கே தப்பான சமாசாரம் நடக்கறதா தகவல் வந்தது. மிஸ்டர், இந்தப் பொண்ணுங்க யாரு?'' என்றார் நுழைந்த இன்ஸ்பெக்டர்.

மகேஷ் ஆடிப்போய்விட்டான்.

''சார், அவளை எங்களுக்குத் தெரியாது. நாங்கள் இருவரும் கேப் போய்விட்டு...''

அதற்குள் அந்தப் பெண்ணைப் பார்த்த இன்ஸ்பெக்டர் முகத்தில் ஆச்சரிய ரேகைகள். ''நீயா?... என்னம்மா நீ இன்னும் உன் தொழிலை விடலையா?''

அவள் பயந்து போனவளாகப் பின் வாங்க, தன்யாவுக்கு அதிர்ச்சி.

''சார், இந்தப் பெண் பாதுகாப்பு கேட்டு எங்களிடம்.. நாங்க... ஸ்கூட்டரில் கன்யாகுமரி...'' குழறினான் மகேஷ்.

''ஆர் யூ மாரீட்?''

''நோ சார்.''

''அப்ப எல்லாம் ஸ்டேஷனில் வந்து சொல்லிக் கொள்ளுங்க.''

மகேஷ் தன்யாவைப் பார்க்க அவள் இன்னும் அதிர்ச்சியின் பிடியிலேயே இருந்தாள்.

ஸ்டேஷன் அருகிலேயே இருந்தது. சற்றுத்தள்ளி மக்கரான மகேஷின் ஸ்கூட்டர் அப்படியே நின்றிருந்தது.

இன்ஸ்பெக்டர் கேட்ட எல்லா கேள்விக்கும் பதில் சொன்னான் மகேஷ். நம்பினார்.

''ஆல்ரைட். இந்தப் பெண் ஒரு நடத்தை கெட்டவள். ஏற்கெனவே எங்க ரிகார்டில் உள்ளவள். உங்களைச் சரியா ஏமாத்தியிருக்கா. என்ன கெட்ட நோக்கத்தோடு உங்களோட தங்கியிருந்தாளோ? அந்த ஆள் கோபத்தில் போன் செய்ததால் நீங்க தப்பிச்சீங்க,'' என்றவர் தன்யாவின் பக்கத்து வீட்டு போன் நம்பரைக் கேட்டு அவள்

தந்தையுடன் டிரங்க் காலில் பேசினார்.

''ஆமா, என் பெண்தான்,'' என்றவர் உடனே வருவதாகச் சொன்னார்.

ஆட்சேபித்த மகேஷிடம், ''இதோ பாருங்க மிஸ்டர், நீங்க சொல்றதை நம்பறேன். ஆனா இந்தப் பெண்ணை அவங்கப்பாவிடம் ஒப்படைப்பதுதான் என் ட்யூடி. மிஸ் தன்யா, உங்கப்பா வர்றது வரை நீங்க வெளியே பெஞ்சில் வெயிட் பண்ணலாம். மிஸ்டர், நீங்க இருப்பதானால் இருக்கலாம் அல்லது போகலாம்.''

**ஸ்**டேஷன் வெளி வராந்தா மர பெஞ்சில் உட்கார்ந்திருந்த போது தன்யா மிகக் குழம்பியிருந்தாள். அந்தப் பெண் ஏன் அப்படிப் பொய் சொல்ல வேண்டும்?

''எல்லாம் உன்னால் வந்த வினை. அந்தப் பெண்ணை அப்பவே துரத்தியடிச்சிருந்தா இந்த நிலை வந்திருக்காது. வம்பை விலைக்கு வாங்கி... இப்பவாவது புரிஞ்சதா உனக்கு?''

''இல்லைங்க அந்தப் பெண் கதறினதைப் பார்த்தப்ப எனக்கு.... இப்பவும் அதெல்லாம் பொய்யுன்னு என்னால் நினைக்க முடியலே.''

அவ்வளவுதான். தன்யா அதை எதிர்பார்க்கவில்லை. மகேஷ் சரேலென எழுந்தான். ''நீயும் உன் இளகின மனசும்! இப்பவே என் வார்த்தையை மதிக்காத உன்னை என் மனைவியா ஏத்துக்க நான் ரொம்ப யோசிக்கணும். குட்பை. வர்றேன்!'' என்றவன் வெளியேறி ஸ்கூட்டரை நோக்கி நடந்தான்.

பார்த்துக் கொண்டு நின்றாள் தன்யா. கண்ணில் நீர் கசிந்தது.

''என்னை மன்னிச்சிடும்மா,'' என்ற குரல் கேட்டது! திரும்பினாள். அந்தப் பெண் தான் நின்றிருந்தாள். இன்ஸ்பெக்டரிடம் அனுமதி வாங்கிக் கொண்டு இவளருகில் வந்திருந்தாள்.

''நான் சொன்னது பொய்தாம்மா. அந்த ஆள் சொன்னமாதிரி நான் விலை பேசப்பட்டு வந்தவள் தான். வந்த இடத்தில் தற்செயலாய் உன்னைப் பார்த்தேன்.....''

''அப்பகன்னா ஆபத்திலிருந்தது...''

''நான் இல்லேம்மா. நீதான். உங்க ரெண்டு பேரையும் பார்த்ததுமே புரிஞ்சிக்கிட்டேன். உன்னை அழைச்சிட்டு வந்தவர் கண்ணைப் பார்த்தே கண்டு பிடிச்சிட்டேன். அதிலிருந்த தப்பான எண்ணத்தை. எப்படியாவது உன்னைக் காப்பாத்திடணும்னு நினைச்சேன். அதான் அப்படிப் பொய் சொன்னேன். தீத் தழும்பைக் கூட ஏற்படுத்திக்கிட்டேன், நீங்க நம்பணும்கிறதுக்காக."

தன்யாவால் அதை நம்பவும் முடியவில்லை. நம்பாலும் இருக்க முடியவில்லை.

''அதெப்படி உனக்குத் தெரியும் அவர் தப்பான எண்ணத்துடன்தான் என்னை அழைச்சிட்டு வந்திருந்தார்னு?''

''அது... அது சொந்த அனுபவம் தாம்மா. இப்படி தப்பான எண்ணத்துடன் அழைச்சிட்டு வந்த ஒரு காதலனிடம் ஏமாறப் போய்த்தான் நான் இந்தக் கதிக்கு ஆளானேன்,'' என்றாள். ''ஒருவேளை நான் சந்தேகப்பட்டதை மீறி உன் காதலன் நல்லவனா இருக்கலாம். அதுக்கும் சான்ஸ் இருக்கு. ஆனா இது.... இது நீ எடுக்கக் கூடாத ரிஸ்க் அம்மா. விஷப்பரீட்சை. உன்னை என் தங்கையா நினைச்சு சொல்றேன்.''

தன்யா அவளுக்குப் பதில் சொல்லாமல் தூரத்தில் நடந்து சென்று கொண்டிருந்த மகேஷையே ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'திட்டமிட்டு என்னை ஏமாற்றியிருப்பானோ இவன்?'

ஸ்கூட்டரை நெருங்கிய மகேஷ் தயக்கம் ஏதுமின்றிச் சுவாதீனமாக அதில் ஏறி அமர்ந்து ஸ்டார்ட் செய்து ஏறிச் செல்ல..

தன்யாவுக்கு எல்லாமே புரிந்தது.

திரும்பினாள்.

''அக்கா!''

அழுதாள்!

---



● அமெரிக்காவில் ஜிம் ரோவே என்பவர் கவனக்குறைவாகக் காரை ஓட்டி, ஒருவரைக் கொன்ற குற்றத்திற்காகச் சிறையில் அடைக்கப்பட்டார். ஆட்டோ சங்கரைப் போல் மூன்று பேரைத் துணை சேர்த்துக் கொண்டு தப்பிவிட்டார். ஒரு வித்தியாசம், மறுநாளே நகர ஷெரிப்புக்கு இவ்வாறு ஒரு கடிதம் எழுதினார்:

''தண்டனையிலிருந்து தப்ப வேண்டுமென்ற எண்ணம் சிறிதும் எனக்கில்லை. சிறைச்சாலைகள் பராமரிக்கப்படும் விதம் என்னை அதிர்ச்சியடையச் செய்தது. கைதிகளும் இந்நாட்டின் வரி செலுத்தும் பிரஜைகள்தான். அவர்களுடைய நாகரிகமான அடிப்படைத் தேவைகளுக்காவது சிறைச்சாலைகளில் வசதிகள் செய்து தரப்பட வேண்டாமா? அவற்றை விரைந்து செய்து முடித்து என் மனைவிக்கு ஒரு போஸ்டு கார்டு போட்டால் போதும். எங்கிருந்தாலும் உடனே வந்து, சரணடைந்து முழுத் தண்டனையையும் அனுபவிக்கத் தயாராக இருக்கிறேன்.''

ஆதாரம்: ஹிந்து.

தகவல்: அ. ஷண்முகசுந்தரம்.

# மேல்நாட்டுத் தரத்தில் கைக்கடிகாரங்கள்

இரண்டு நாட்களாக நல்ல மழை பெய்து ஓய்ந்திருந்த சமயம். சதா கிண்டலும் கேலியுமாக, கலகலவென்று பேசும் நண்பரைக் காண வந்தார் ஒருவர்.

வந்ததும் வராததுமாக, "என்ன கிருஷ்ண மூர்த்தி. இந்த இரண்டு நாள் மழையில், உன் வீட்டுக் கிணற்றில் தண்ணீர் இவ்வளவு உயர்ந்திருக்குமா? இல்லை இவ்வளவு உயர்ந்திருக்குமா?" என்று கையைக் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்திக் கேட்டார்.

"கிணற்றில் ஒன்றும் தண்ணீர் பிரமாதமாக ஏறி விடவில்லை. உன் கையில் ஏறியிருக்கும் குவார்ட்ஸ் வாட்ச் பிரமாதமாக இருக்கிறது. அதைக் காண்பிக்கத்தானே வந்தாய்?" என்று ஒரு போடு போட்டார் கிருஷ்ணமூர்த்தி.

"அடப் பாவி, ரொம்பத்தான் காலை வாரி விடாதே!" என்று சிரிப்புடன் ஒப்புக் கொண்டார் நண்பர்.

ஜெர்மனியிலுள்ள நியுரம்பர்க்கில், சுமார் ஐந்நூறு வருடங்களுக்கு முன்னால் பீட்டர் ஹென்லீன், கையில் எடுத்துச் செல்லும் கடிகாரத்தை உருவாக்கிய போது, அதைக் கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டோ, இடுப்பில் கட்டித் தொங்க விட்டுக் கொண்டோதான் இருந்தார்களாம்! பாக்கெட்டில் போட்டுக் கொள்ளும் அளவுக்குச் சிறிதாக இருந்ததால் அதற்கு 'நியுரம்பர்க் முட்டை' என்று கூடப் பெயர் வைத்தார்களாம்.

பீட்டர் ஹென்லீன், கடிகாரத்தின் 'மெயின் ஸ்பிரிங்' என்ற முக்கியப் பகுதியை உருவாக்கினார். நெதர்லாந்தைச் சேர்ந்த கிறிஸ்டியன் ஹைஜென்ஸ் 'ஹேர் ஸ்பிரிங்' கைக் கண்டுபிடித்தார். இதனால் கடிகாரத்தைக் கையடக்கமாய், சிறியதாகச் செய்ய முடிந்தது. இது 1675ல்.

வினாடிகளைத் தனியாகக் காட்டும் கடிகாரத்தை, ஜெனிவாவில் 1766ல் ஜீன் மோய்ஸ் போஸெய்ட் என்பவர் கண்டு பிடித்து இன்னொரு புதுமை நிகழ்த்தினார். ஹான்ஸ் வில்ஸ்டோர்ஃப், ரோலக்ஸ் கைக் கடிகாரங்களை பிரிட்டிஷ் சந்தைக்கு அறிமுகப்படுத்தியது முதல் உலகப் போருக்குச் சற்று முன்புதான்.

முதல் உலகப் போர் சமயத்தில்தான் கைக் கடிகாரத்தின் அருமை சிப்பாய்களுக்குத் தெரிந்தது. ஒவ்வொரு முறையும் பாக்கெட்டிலிருந்து கடிகாரத்தை எடுத்து மணி பார்ப்பதற்குப் பதிலாக, கையில் 'டக்' கென்று பார்த்துத் தெரிந்து கொள்ள முடிந்தது.

உபயோகத்துக்காகக் கையில் கடிகாரம் கட்டிக் கொள்ளுவது பரவலாகி விட்ட



* நவீன வாட்ச் ஸர்வீஸ் சென்டர்

பிறகு, அதன் அழகிலும், கவர்ச்சியிலும் பலர் சற்றுக் கூடுதலாகவே கவனம் செலுத்த ஆரம்பித்து விட்டனர். விதவிதமான வண்ணங்களில், டிசைன்களில், இப்போது அவை தயாராகின்றன!

கைக் கடிகார விற்பனையிலும், பழுது பார்த்தலிலும் நவீன மையங்களைச் சென்னையில் நடத்தி வரும் அசோக் தோஷியைச் சந்தித்துப் பேசினோம். சில சந்தேகங்களுக்கு விளக்கமளித்தார் அசோக்:

● இப்போது மிகப் பிரபலமாய் உள்ள க்வார்ட்ஸ் கடிகாரத்தில் என்ன சிறப்பு?

'பாலன்ஸ் வீல்' சக்கரத்துக்குப் பதிலாக,



• அஷோக் தோஷி

இயங்கும் திறன் 'க்வார்ட்ஸ்' அமைப்பில் இருக்கிறது. க்வார்ட்ஸின் அதிர்வால் கடிகாரம் இயங்குகிறது. 'க்வார்ட்'ஸின் முக்கியப் பகுதியைக் கிரிஸ்டல் எனலாம்; ரசாயனச் சேர்க்கையால் இது உருவாக்கப்படுகிறது. 'க்வார்ட்ஸ்' கடிகாரத்தின் 'இயங்கும் பகுதிகள்': கிரிஸ்டல், பாட்டரி, பிரிண்டட் சர்க்யூட், டிஸ்ப்ளே போர்டு ஆகியவை.

● 'ஆட்டோமாடிக்' கைக் கடிகாரங்கள் இப்போதும் விற்கப்படுகின்றனவா என்ன?

எச். எம். டி. யும், ஆல்வின்னும் தயாரித்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். தாராளமாகக் கிடைக்கின்றன.

● 'ஆட்டோமாடிக்' கைக் கடிகாரத்தைக் சுழற்றி வைத்து விட்டால் ஓடாதாமே?

அப்படியல்ல. நமது மணிக்கட்டின் அசைவுகளுக்கு ஏற்ப, தானாக இயங்கும் சுழற்சி அமைப்புக் கொண்டது (Self winding rotor). எட்டு மணி நேரம், பத்து மணி நேரம் கையில் கட்டிக் கொண்டிருந்தால், அந்த இயக்கமே அதற்குப் போதுமானது. இரவில் சுழற்றி வைத்து விட்டாலும் ஓடும். மறுநாள் மறுபடி கையில் கட்டிக்கொள்ளுகிறபோது அதன் இயக்கம் தொடருகிறது.

● சுவிஸ் நாட்டுக் கடிகாரங்களில், 'ஜுவெல்ஸ்' இத்தனை என்று போட்டிருப்பார்களே, அது என்ன?

மெகானிகல் கைக் கடிகாரங்களில் மட்டுமே இந்த ஜுவெல்ஸ் சமாசாரம் இருக்கும். இயக்கும் சக்கரங்களில் மேலும் கீழுமாக உள்ள முனைகளின் உரசலைக் குறைத்துத் தேய்மானம் மிகக் குறைவாக அமையவும், துல்லியமாக இயங்கவும் இது உதவுகிறது. 'வாட்ச் ஆயில்' எனப்படும் எண்ணெயையும் இதில் ஒரு துளி விட்டிருப்பார்கள்!

● ஒரு கைக் கடிகாரத்தைப் பழுது பார்க்கக் கொடுத்தால் பத்து நாள் வைத்துக் கொண்டு விடுகிறீர்களே, ஏன்?

சில வேளை பதினைந்து நாள் கூட வைத்திருப்போம்! ஏன் என்றால், பழுது பார்க்க ஒரு நாள் போதும் என்றாலும், கடிகாரத்தைப் பிறகு மூன்று நிலைகளில் வைத்திருந்து அதன் ஓட்டத்தைப் பரிசோதிக்க வேண்டும்.

● அது என்ன மூன்று நிலைகள்?

டயல்—அப் நிலை; க்ரௌன் — டவுன் நிலை; ட்வெல்வ் — டவுன் நிலை. இந்த மூன்று நிலைகளிலும், கடிகாரத்தில் மாறுதல் எதுவும் இருக்கக் கூடாது என்பதை உறுதி செய்து கொள்ளவே பத்து நாட்கள் எடுத்துக் கொள்ளுகிறோம்.

● நமது கடிகாரங்கள் அயல் நாடுகளுக்கு



• தோஷி வாட்ச் கம்பெனி

# வர்த்தமானன் பதிப்பகம் போற்றும் வாணிப நெறி

நமது ஒப்பற்ற தமிழ்ச் செல்வங்கள் சிற்றூர்தோறும், பெருநகர்தோறும் சென்று பரவ வேண்டும் என்பது எங்கள் இலட்சியம்! சலுகை விலையில் தரும்போதுதான் இந்த இலட்சியம் ஈடேறுகிறது என்பதனை நாங்கள் எங்கள் அனுபவத்தால் உணர்கிறோம்!! எனவேதான் மாபெரும் சலுகையைத் தொடர்ந்து தருகிறோம்.

## 40% தள்ளுபடி தொடர்கிறது

### இதோ இரண்டு புதிய வெளியீடுகள்! தமிழ் பெற்ற இரண்டாவது திருக்குறள் என்று போற்றத்தக்க புறநானூறு காணீர்!! பத்துப்பாட்டு பாரீர்!!!

உங்களால் மட்டும் எப்படி இவ்வளவு சலுகை தர முடிகிறது? என்று கேட்கத் தோன்று கிறதல்லவா? இதோ சில காரணங்கள்: 1. புத்தக வியாபாரிகளுக்குத் தரும் சலுகையை நேராக வாங்குவோர்க்கு தருகிறோம். 2. இதை ஒரு தொழிலாக மட்டும் கருதவில்லை, தொண்டாக வும் மதிக்கிறோம். 3. வெளியிடும்நூல்களை விரைவாக விற்றுவிட்டு மேலும் மேலும் புதிய நூல்களைக் கொண்டு வர விழைகிறோம். 4. 10% லாபம் கிடைத்தால் போதும் என்று மன நிறைவு அடைகிறோம். 5. 'பட்டினப்பாலை' கூறும் வாணிப அறிவுரைப்படி வாணிபம் செய்கிறோம். ''கொடுப்பதைக் குறைவாகத் தரக்கூடாது; கொள்வதை அதிகமாகப் பெறக் கூடாது. பொருள் இது, விலை இது, இலாபம் இவ்வளவு என்று இப்படி உண்மையைச் சொல்லி வாணிபம் செய்தால் வாணிபம் பெருகும்; நாடும் நலமுறும்'' என வாணிப நெறியை வரையறுத்துக் கூறுகிறது, பாலைப்பாட்டு!

வாய்ப்பைப் பயன்படுத்த வேண்டுகிறோம்! எல்லாமே உரையுடன் கூடியவை!

| நூல் பெயர் | தொகுதி | விலை | சலுகை விலை |
|---|---|---|---|
| ★ புறநானூறு | 2 | ரூ 75 | ரூ 45.00 |
| ★ பத்துப்பாட்டு | | ரூ 25 | ரூ 15.00 |
| ★ கம்பராமாயணம் | 9 | ரூ 450 | ரூ 270.00 |
| ★ கந்தபுராணம் | 10 | ரூ 460 | ரூ 276.00 |
| ★ வில்லிபாரதம் | 6 | ரூ 230 | ரூ 138.00 |
| ★ உத்தரகாண்டம் | 2 | ரூ 80 | ரூ 48.00 |
| ★ சிலப்பதிகாரம் | 3 | ரூ 42 | ரூ 25.00 |
| ★ நாலடியார் | | ரூ 22 | ரூ 13.00 |
| ★ திருக்குறள் | | ரூ 25 | ரூ 15.00 |
| ★ திருவாய்மொழி (முதல் தொகுதி) | | ரூ 30 | ரூ 18.00 |
| ★ தண்டியலங்காரம் | | ரூ 30 | ரூ 18.00 |

சலுகை விலையை மட்டும் M.O. அ D.D. மூலம் அனுப்புக. உடனே நூல்களை V.P.P. யில் அனுப்புகிறோம். V.P.P. செலவைத் தபால்காரரிடம் கொடுத்து நூல்களைப் பெறுக. பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

**Varthamanan Pathippagam,**
ARR Complex,
141, Usman Road, T. Nagar, Madras-17
(Near Panagal Park)




# பிரபல ஜோதிட நிபுணர் டி. ராஜேந்தர்!

டி. ராஜேந்தர் லேட்டஸ்டாகத் தீவிரமாக இறங்கியிருப்பது ஜோஸியத்தில்! எப்படி கதை, வசனம், நடிப்பு, இயக்கம், பாடல், இசை முதலிய எல்லாமே டி. ராஜேந்தர் என்று திரைப்படத் தயாரிப்பில் ஈடுபடுகிறாரோ அப்படியே ஜோசியத்திலும்!

அதாவது, நியூமராலஜி, ரேகை சாஸ்திரம், சோழி ஜோஸியம், ஆரூடம், ஜாதகம் பார்ப்பது போன்ற ஜோஸியத்தின் சகல பிரிவுகளையும் கரைத்துக் குடித்துக் கொண்டிருக்கிறார். இப்போதெல்லாம் டி. ஆர். தனியாக இருப்பதில்லை. யாராவது ஒரு ஜோஸியர் அவர் அறைக்குள் உட்கார்ந்திருக்கிறார். 'ஒவ்வொருவரிடமிருந்தும் புதுப் புது விஷயங்களை அறிந்து கொள்ள முயற்சி செய்கிறேன்' என்று கூறும் டி. ஆர்., நண்பர்களுக்கு ஜோஸியம் சொல்லவும் ஆரம்பித்து விட்டார்!

கல்லூரி நாட்களிலிருந்தே ஜோஸியத்தில் டி. ஆருக்கு ஒரு பிரமிப்பாம். இப்போது ஜோஸியத்தைப் புரிந்து கொண்டு விட்டதால் பிரமிப்பு நீங்கிய பற்றுதலாம்!

— சலன்.

ஏற்றுமதி ஆகின்றனவா?

தற்சமயம் எச். எம். டி. கடிகாரங்கள் மத்திய கிழக்கு நாடுகள் சிலவற்றுக்குக் குறைந்த அளவில் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஆனால், டைடன் கடிகாரங்கள் ஏற்றுமதிக்கு என்றே புதிய தொழிற்சாலை ஒன்றில் தயாராகப் போகின்றன. நம் கடிகாரங்களும் ஏற்றுமதித் தரத்தை எட்டியிருப்பதும், டிசைன்களில் வெளிநாட்டுக் கடிகாரங்களுடன் போட்டியிடும் அளவுக்கு முன்னேறியிருப்பதும் பெருமைக்குரிய விஷயங்கள்.

● நம் கடிகாரங்கள் எல்லாமே நூற்றுக்கு நூறு இந்தியாவில் தயாரிக்கப்படுகின்றனவா?

இல்லை. இன்னும் சில பாகங்களை நாம் இறக்குமதி செய்யத்தான் வேண்டியிருக்கிறது. கேஸ் — டயல்கள் இப்போதும் இறக்குமதி செய்யப்படுகின்றன. முழுக்க முழுக்க இந்தியாவில் கடிகாரம் தயாரிக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை. எச். எம். டி. யும் டைடனும் தங்கள் தொழிற்சாலைகளை இதற்கென நவீனமயமாக்கி வருகின்றன.

● குறைவான விலையில் நல்ல கடிகாரம் இப்போது கிடைக்கிறது. மிக விலை உயர்ந்த கடிகாரம் எது?

● பம்பாயில் தயாராகும் ரேமண்ட் வெய்ல் கடிகாரங்கள் மிக விலையுயர்ந்தவை. இவை சென்னையில் கூடக் கிடைப்பதில்லை! (விலை இரண்டாயிரம் — மூவாயிரம் ரூபாய் இருக்கும்.) மற்ற நிறுவனத் தயாரிப்புக்களிலும் இது மாதிரி உயர்ந்த விலையில் ஓரிரண்டு மாடல்கள் இருக்கும்.

● இப்போதும் கள்ளக் கடத்தல் மூலம் கடிகாரங்கள் விற்பனையாகின்றனவே?

வருடத்துக்கு ஒரு கோடி முதல் ஒன்றரைக் கோடி கைக் கடிகாரங்கள் நம் உள்நாட்டுச் சந்தைக்கே தேவை. ஆனால், உள் நாட்டுத் தயாரிப்பு கிட்டத்தட்ட எழுபது லட்சம் தான். அதனால் கடத்தல் கடிகாரங்களின் விற்பனையும் ஓரளவுக்கு இருக்கவே செய்யும். ஆனால் ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். கடத்தல் கடிகாரங்களில் 75 சதவிதம் போலி. 25 சதவிதம் மட்டுமே அசல்!

— சாருகேசி

அட்டையில்: ஜெயலக்ஷ்மி
வண்ணப்படம்: யோகா

# கதாநாயகன் கனவுகளோடு டைரக்ஷனில் இறங்கு!

● புலியூர் சரோஜாவிடம் டான்ஸ் அஸிஸ்டெண்டாக இருந்த ஜெயந்த் குமாருக்கு எதிர்பாராத அதிர்ஷ்டம்! 'சித்திரைப் பூக்கள்' என்ற படத்திற்கு நாயகன் தேடிக் களைத்துப் போன தயாரிப்பாளர் தமிழ் மணியின் கண்களில் ஜெயந்த் குமார் பட, அந்த இடத்திலே கதாநாயகன் சான்ஸ்! ''நான் கனவுல கூட இப்படியெல்லாம் நினைச்சுப் பார்த்ததேயில்லை! இதுவரை நூற்றி ஐம்பது படங்களுக்கு டான்ஸ் அஸிஸ்டெண்டா ஒர்க் பண்ணியிருக்கேன். கமல் ஹாசனுக்குப் பிறகு, டான்ஸ் அஸிஸ்டெண்டா இருந்து கதாநாயகனாக அறிமுகமாவது நான்தான்'' என்று பெருமிதத்துடன் கூறினார் ஜெயந்த் குமார். இந்தப் படத்தில் அவருக்கு ஜோடி முன்னாள் பேபி ஸ்டார் விநோதினியாம்!

● கொஞ்ச காலமாகப் பட வாய்ப்புக்களே இல்லாமல் இருந்த சுந்தர் கே. விஜயன், 'என்னருகில் நீ இருந்தால்...' என்ற படத்தினை டைரக்ட் செய்து கொண்டிருக்கின்றார். கதாநாயகி பிரியங்கா பாம்பேயிலிருந்து இறக்குமதி. தமிழுக்குப் புதுசு! தமிழில் எப்படியும் இடம் பிடிக்க வேண்டும் என்பதற்காகவே கால்ஷீட் அட்ஜஸ்ட் செய்து, ஷூட்டிங்கிற்கு பாம்பேயிலிருந்து ஃப்ளைட்டில் வந்து போய்க் கொண்டிருக்கின்றார்!

● பாக்யராஜ் — பாண்டியராஜன் — ராமராஜன் இந்த வகையறாக்கள் போல கதாநாயகன் கம் டைரக்டராக வேண்டும் என்றுதான் நீண்ட நாட்களாக சான்ஸ் தேடிக் கொண்டிருந்தார் டைரக்டர் பாரதிமோகன். ஆனால் டைரக்ஷன் வாய்ப்பு மட்டுமே கிடைத்தது. 'ஒரு தொட்டில் சபதம்' டைரக்ஷனுக்குப் பின்பு எப்படியும் ஹீரோ ஆகிவிடுவேன் என்று சபதம் செய்திருந்தாராம். அதை இப்போது 'சின்னக் காளை' படத்தில் நிறைவேற்றி விட்டார். அவரே டைரக்டர் கம் ஹீரோ! தற்போது பெரும்பாலானவர்கள் கதாநாயகன் கனவுகளோடுதான் டைரக்ஷனில் கால் வைக்கிறார்கள்!



* பாரதிமோகன்

● 'அறுபது நாள் அறுபது நிமிடம்' படம் ஹீரோ ராஜ்திலக். பிரபல டான்ஸ் மாஸ்டர் ராதா கிருஷ்ணனின் மகன். எம். காம். படித்து விட்டு, சௌதி அரேபியாவில் நல்ல வேலையில் இருந்தவரை சினிமா இழுத்து விட்டது. வேலையை உதறி விட்டு ஒரு கன்னடப் படத்தில் நடித்தார். படம் ஹிட்! அடுத்து ஒரு மலையாளம். அதுவும் ஹிட்! ஏனோ சொந்த மொழிதான் அவருக்குக் கை கொடுக்கவில்லை. எட்டு வருடங்களாகப் பல தமிழ்ப் படங்களில் நடித்திருக்கின்றார்; ஒன்று கூட வெளிவரவில்லை. 'அறுபது நாள் அறுபது நிமிடம்' ரிலீசுக்குப் பின்புதான் அவரது ஆட்டம் ஆரம்பமாகியிருக்கின்றதாம்! தற்போது அவர் கையில் இரண்டு தமிழ்ப் படங்கள். ஆறு மலையாள டி.வி. சீரியல்கள்!

— எஸ். பாலு



* விநோதினியுடன் ஜெயந்த்குமார்.



* ராஜ்திலக்



* ப்ரியங்கா

* என்ன நடவடிக்கை?



# ஜனாதிபதியின் நடவடிக்கை எப்படி இருக்க வேண்டும்?

* பி. நடராஜன், அன்னூர்.

? கல்கி, தி. மு. க. வின் ஆதரவுப் பத்திரிகையா?

! தி. மு. க. செய்யும் நல்ல காரியங்களை ஆதரிக்கும் பத்திரிகை. ஆனால் அதற்குத் தி. மு. க. ஆட்சி அடிக்கடி வாய்ப்பளிப்பதில்லை என்பதுதான் விசனத்துக்குரியது.

* ஆர். ஜெயாராணி சுரேஷ், சென்னை.

? இந்தியாவைப் போல் மதச் சார்பற்ற நாடுகள் உலகில் வேறு இல்லையா? அங்கே பிரச்னைகள் எவ்வாறு சமாளிக்கப்படுகின்றன?

! சிறந்த கல்வி மூலம் பரந்த மனப்பான்மையை மக்கள் அடைவதன் மூலம்தான். இரண்டாவது முக்கிய காரணம், அரசு 'எம்மதமும் சம்மதம்' என்ற அடிப்படையில் இயங்குமே தவிர, மதத்தைப் புறக்கணிக்காது. இறையுணர்வை மதிக்கும்.

* வி. ரெங்கநாதன், திருச்சி.

? கூடிய சீக்கிரம் மீண்டும் ஒரு பாராளுமன்றத் தேர்தல் வரப்போகிறது. அப்போது கல்கி எந்தக் கட்சியை ஆதரித்து எழுதும்?

! தோல்வி அடையப்போகும் கட்சியைத்தான்!

* மீ. ஷாஜஹான், கம்பம்.

? 'வி. பி. சிங்குக்கு ஆதரவு அளிப்பதைத் தடுப்பதற்காக அ. தி. மு. க. எம். பிக்களைப் பெங்களூரில் காங்கிரஸார் சிறை வைத்துள்ளனர்' என்று கலைஞர் கூறுகிறாரே?

! கருணாநிதி கூறும் காரணங்கள் சில சமயம் சீரியஸ்ஸாக இருக்கும்; சில சமயம் விளையாட்டுத்தனமாக இருக்கும். இது இரண்டாவது ரகம்.



* எதிர்ப்புக் கொடி



* தவிர்க்கப்பட வேண்டியவர்

* விளையாட்டாக...



* புதுப்புது அர்த்தங்கள்...



* எஸ். நாரம்புநாதன், கரண்டை.

? பத்திரிகைச் சுதந்திரம் என்றால் என்ன?

! உபேந்திராவையும் முலாயம் சிங் யாதவையும்தான் கேட்க வேண்டும்! அவர்கள் தாம் புதுப்புது அர்த்தங்களைக் கூறிக் கொண்டிருக்கிறார்கள்!

* இளையபாரதி, கொங்கணாபுரம்.

? 'இடைத்தேர்தலைத் தவிர்க்க நான் எத்தகைய முயற்சியையும் மேற்கொள்ளத் தயார்' என்கிறாரே, சந்திரசேகர்?

! இடைத் தேர்தலைத் தவிர்க்க முடியாவிட்டாலும் பாதகமில்லை; சந்திரசேகர் தவிர்க்கப்பட வேண்டியவர்.

* பா. நாகலெட்சுமி, சென்னை.

**? குஜராத்தில் ஜனதா தளத்திற்குக் காங்கிரஸ் ஆதரவு கொடுத்துள்ளது பற்றி...?**

! முன்னர் சஞ்சய் காந்தி செய்ததை இன்று ராஜீவ் காந்தியும் வெற்றிகரமாக மாநிலத்தில் மட்டுமின்றி மத்தியிலும்செய்து காட்டியிருக்கிறார். அவர் வேலையைச் சுலபமாக்க பி. ஜே. பி. யும், தேவிலால் — சந்திரசேகர் கூட்டுச் சதியும் உதவியுள்ளன.

* சு. சம்பத், திருவள்ளூர்.

**? அய்யப்ப கானம் மறைந்து விட்டதே?**

! வீரமணி தான் மறைந்தார்; கானம் மறையவில்லை. தொடர்ந்து செவிகளில் ஒலிக்கிறது.

* எஸ். சுந்தரம், சென்னை — 44.

**? கல்கியில் வெளியான 'உணர்வுகள் உறங்குவதில்லை' நாவலுக்கு இவ்வாண்டு ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் பரிசு கிடைத்துள்ளதே?**

! கிடைக்காமல் இருந்தால்தான் ஆச்சரியம். ஏனெனில் கல்கியில் வெளியாகும் நாவல்கள் அப்படி தரத்தில் ஒன்றோடொன்று போட்டியிடுவன. சமீபத்தில் வெளியான வைவஸ்வதனின் 'மணல்வெளி மான்கள்', தற்போது இடம்பெற்று வரும் வைரமுத்துவின் 'சிகரங்களை நோக்கி...' போன்றவையும் பரிசுகளுக்குத் தகுதி பெற்ற உன்னதப் படைப்புக்களே. ர. சு. நல்லபெருமாளைப் பொருத்தமட்டில் அவருக்கு கல்கி வாயிலாகக் கிடைத்துள்ள இரண்டாவது பெரிய வெற்றி இது. முதல் வெற்றி, வெள்ளி விழா நாவல் போட்டியில் 'கல்லுக்குள் ஈரம்' பெற்ற பரிசு. 'உணர்வுகள் உறங்குவதில்லை' நாவலில் சந்திரசூடனும் பார்வதியும் மறக்க முடியாத கதாபாத்திரங்கள். நல்லபெருமாளின் நடை மிக இயல்பானது. உரையாடல்கள் மூலமே குணசித்திரங்களை உருவாக்கிக் காட்டும் திறன் அவருக்குக் கைவந்த கலை.

* கே. ரமேஷ்ராம், செங்குன்றம். *

**? ஜனாதிபதியின் நடவடிக்கை எப்படி இருக்க வேண்டும்?**

! ராஜீவை ஆட்சி அமைக்க அழைக்க வேண்டும். அவர் மறுத்தால், நாடாளுமன்றத்தைக் கலைத்து மறு தேர்தலுக்கு உத்தரவிட வேண்டும். வேறு மார்க்கம் அவருக்கு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. சந்திரசேகரை அரசு அமைக்கச் சொல்வது, துரோகத்தை அரியாசனத்தில் அமர்த்துவதாகும். தேசிய அரசு அமைக்கலாம் என்று யோசனை பண்ணுவது, கூரை ஏறிக் கூவ முடியாதவர்களை விண்ணேறி சொர்க்கத்தைக் கொண்டு வர முயற்சி செய்யுமாறு கூறுவதாகும்.

* கே. ச. பக்தவத்சலம், விருத்தாசலம்.

**? சமீபத்தில் தங்கள் மனத்தை வெகுவாகப் பாதித்த விஷயம்?**

! தெற்கு ஸ்ரீலங்காவில் 60,000 மக்கள் போன இடம் தெரியவில்லை என்ற செய்தி தான். மாயமாய் மறைந்திருக்க முடியாது என்னும்போது அவர்களுக்கு நேர்ந்திருக்கக் கூடிய கதியை எண்ணினால் 'பகீர்' என்கிறது. ஜே. வி. பி. இயக்கத்தை ஒடுக்க மேற்கொண்ட நடவடிக்கைகளின் விளைவாகக் கருதப்படுகிறது.



* ராஜாசர் பரிசு

* கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

**? தமிழக ஜனதா தளத்திலும் சிவாஜியை மாற்றக் கோரிச் சிலர் போர்க்கொடி உயர்த்தியிருக்கிறார்களாமே?**

! இறக்கி விடச் சொல்லுங்கள். மனுஷர் சிங்கப்பூரிலிருந்து முதலில் உடல் நலம் பெற்றுத் திரும்பி வரட்டும். அப்புறம் பார்க்கலாம். புண்பட்ட நெஞ்சில் வேல் செலுத்த வேண்டாம்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

கே. ரமேஷ்ராம்,
3, சத்திகான் மேஸ்திரி தெரு,
செங்குன்றம், சென்னை — 52.

## 5

"என்ன தோழர்களே!
எவரையும் காணோம்.

நிலா வரும் நேரம் நெருங்கி விட்டதே!

இன்னும் கொஞ்ச நேரத்தில் இந்த
உச்சிப்பாறை தங்கமுலாம் பூசிக் கொள்ளப்
போகிறதே!
வானத்திலிருந்து பூமிக்கு ஒரு வெள்ளி
ஏணி விழப் போகிறதே!

பூமியில் பிறந்ததற்காய் மனிதன்
கர்வப்படும் நேரம் நெருங்கிக் கொண்
டிருக்கிறதே!

ஏன்? ஏன் வரவில்லை எவரும்?
அற்புதமான நாளின்று.
பொன்கொடுத்து வாங்கிய பொழுது.
என்ன ஏகாந்தம்!
யூகலிப்டஸ் மரத்தின் இலைகள் கூட
சாவிகொடுக்காத கடிகார முட்களாய்ச்
சட்டென்று நின்றுவிட்டன.
மேற்கு வானத்தில் வெற்றிலை போட்டுத்
துப்பிவிட்டுச் சூரியன்கூடத் தூங்கப்
போய்விட்டான்!

இன்று பார்த்து மேகங்களுக்கெல்லாம்
வானத்தில் விடுமுறை.

அதோ! உலா வரப்போகும் ராஜ
குமாரிக்குச் சிவப்புக் கம்பளம் விரிக்கிறது
கிழக்கு!
என்ன தோழர்களே!
எவரையும் காணோம்."

"வருவார்கள், திருஞானம்!
வருவார்கள்."

"ஆமாம்! வருவார்கள்.
வெள்ளம் வடிந்தபின் மணல் பார்க்க
வருவார்கள்.
பிரசவத்திற்கு வரச் சொன்னால்,
பேர் வைக்க வருவார்கள்.
திருமணத்துக்கு வரச் சொன்னால்
முதலிரவுக்கு வருவார்கள்."

"சலித்துக் கொள்ளாதே திருஞானம்!
உழைக்கும் மக்கள்... வியர்வை உலர்த்தி
வெளியேற வேண்டாமா?

அதோ பார்! ஐந்தாறு பேர்! நிலா
ரசிகர்கள்."

சற்றுத் தூரத்தில் ஐந்தாறு நிழல்கள்
தெரிந்தன.

"வாருங்கள் ரசிகர்களே!
வாருங்கள்.

யாரும் வரவில்லை என்று கிழக்கின்
தொண்டை விக்கிக் கொண்டிருக்கிறது!
நீங்களும் நாங்களுமாவது நிலா
பார்ப்போம்.
நிலா தரிசனம் நெஞ்சுக்கு நல்லது.
வாருங்கள்.

நாமெல்லோரும் மனிதச்சங்கிலியாய்க்
கைகோத்து நின்று நிலாவைக் கொஞ்ச
நேரம் நிறுத்தி வைப்போமா?"

வந்தவர்கள் அவர்களை நோக்கி
வராமல் புதர்களில் மறையும் முயல்களாய்
ஒளிந்தார்கள்.

"என்ன இது!
பூமியை நோக்கிவந்த மழைத்துளிகளை
வானம்பாடி குடித்து விட்டதா?

அவர்கள் நிலாவின் கடன்காரர்களா?
ஏன் ஒளிகிறார்கள்?

இல்லை திருஞானம்! இல்லை.

அவர்கள் மாலைக் கடன்காரர்கள்!

ஒரு துக்கமேகம் திருஞானத்தின்
கண்கள் தொட்டுக் கடந்தது.

பாவிகளே!

வானம் புதையல்தர வருகிறது!
நீங்கள் கண்களை மூடிக்கொண்டு
கைகளைப் பூமிக்குள் புதைத்துக்
கொள்கிறீர்களே!

அதோ! அதோ!

வந்துவிட்டது வானத்து அதிசயம்!

உதடுகள் மட்டும் சிரித்தாலும்
முகமெல்லாம் பரவியிருக்கும்
மோனாலிசாவின்
புன்னகை மாதிரி, அதோ! உடம்பெல்லாம்
சிரிக்கிறதே அந்த ஜீவநிலா!

வாருங்கள் தோழர்களே!
நீங்களும் நானுமாவது கொண்டாடுவோம்
நிலா விழா!

அதோ! வெளிச்சம் நுரைக்கிறது பாருங்கள்!

பூமி நிலாவைக் கைநீட்டிக் கேட்க, பூமிக்கு
நிலவு பொன்னாடை போர்த்த, விண்ணும்
மண்ணும் சமபந்தி போஜனம் செய்யும்
சம்பவம் பாருங்கள்!

நிலாவில் சோறெதற்கு?
நிலாவே சோறு நமக்கு!

வாருங்கள்!
இங்கிருந்தே நிலாவை முத்தமிடுவோம்!

**வைரமுத்து**

அந்தக் கறையைச் சுட்டுவிரல் நீட்டித்
தொட்டுத்
துடைத்துவிடுவோம்.

காலியாய்க் கிடக்கும் புலன்களின்
கஜானாவை
நிலாவை அள்ளி நிரப்பிக்கொள்வோம்!

கண்களின் வழியே மதுவருந்துவோம்!

புலன்களை நஷ்டப்படுத்தாத போதை
கொள்வோம்!

இந்த நிலா மட்டுமே நம் ஒவ்வொருவரின்
தலைக்கும்
கிரீடமாக அமையும்.

நிலா என்பது வெறும் கோளமில்லை.
அது இயற்கையின் ஆசீர்வாதம்.

நிலா என்பது ஒரே வார்த்தையில் ஒரு
கவிதை!

விஞ்ஞானம் நிலவைப் பாலைவனம்
என்கிறது.

அது காற்றில்லாத மேடுபள்ளம் என்று
கணிக்கிறது.

விஞ்ஞானத்திற்கு ஆன்மா இல்லை!

கிளியோபாட்ராவின் வாயில் வைத்தாலும்
தர்மாமீட்டர் உஷ்ணம் மட்டுமே சொல்லும்;
உதடு சுவைக்காது!

விஞ்ஞானம் உண்மைதான்.

உண்மையைச் சிலநேரம் மறந்தாக
வேண்டும்.

பகலின் ரத்தம்தான் பாலென்றால்
சைவர்கள் பருக முடியுமா?

எழுபது சதவிகிதம் தண்ணீரும், தாதுக்களும்,
உடைந்துவிடும் எலும்பும், —
அறுந்துவிடும் நரம்பும், அழுகிவிடும்
சதையும்தான்

அணைத்துக் கிடப்பவனின்
தேகமென்றால் முத்தத்தை
நோக்கி முன்னேற முடியுமா?

நிலா பாலைவனம் என்னும் நிஜம்
மறந்து போவோம்.

அந்த நிறம் நிஜம்;
அதன் கிரணங்கள் ஏற்படுத்தும் கிளர்ச்சி
நிஜம்;
நிலா வேளையில் இந்தப் பூமி
பொன்னரைத்துக்
குளிக்கும் பொலிவு நிஜம்;

வாருங்கள்!

நிலாவின் கிரணங்களைப் பற்றிக்கொண்டே
நிலாவில் தரையிறங்க முடியுமா? என்ற
கிறுக்குத்தனமான கற்பனையில்
கிளர்ச்சி கொள்வோம்.''

தன்னை மறந்து, தன் நாமம் கெட்டு
தேகமெங்கும் ஆவேச அதிர்வுகள் பரவித்
திரும்பிப் பார்த்தான் திருஞானம்.

அருகிருந்த தோழன்மார் ஐவருமே
அங்கில்லை.

தவளைகள் போன தடம் தண்ணீரில்
இல்லாதது மாதிரி அவர்கள் போன சுவடும்
அங்கே இல்லை.

''போய் விட்டீர்களா?
நீங்களும் போய் விட்டீர்களா?
ரஷ்யப் படையெடுப்புக்குப் பிறகு பிரான்சு
திரும்பிய
நெப்போலியனின் ராணுவம் மாதிரி சேர்ந்து
வந்தவர்களும் தேய்ந்து போனீர்களா?''

திருஞானம் தேம்பித் தேம்பி அழுதான்;
தென்னங்கீற்றில் வழியும் மழைத்துளிகள்
மாதிரி சரஞ்சரமாய் அழுதான்;

மரணத்திற்குக்கூட அழக்கூடாது என்றவன்
மனிதர்களுக்காக அழுதான்;

அந்த உச்சிப் பாறையில் விழும் நிலாவின்
கிரணங்கள்
நனைய நனைய அழுதான்;

காட்டு மரங்கள் அவனுக்காக அசையாமல்
நின்று மௌன அஞ்சலி செலுத்தின.

ஆவேசம் அடங்கி அப்படியே
உட்கார்ந்தான்.

''நீ மட்டுமல்ல நிலாவே! நானும்
அனாதைதான்.

---

நல்லொழுக்கம், ஒருவனுடைய அழகிய தோற்றத்தைவிட உயர்ந்தது. அழகிய சிலைகளும் படங்களும் தரும் ஆனந்தத்தைக் காட்டிலும் அதிகமான சந்தோஷத்தை இது தருகின்றது. கலைகள் யாவற்றிலும் மிகவும் உன்னதமானது நல்லொழுக்கமே.

— எமெர்சன்.

தகவல்: பி. நாகராஜன்.



"நானும் உங்ககிட்ட ஒரு வருஷமா வந்துக்கிட்டிருக்கேன்; அப்படியும் வியாதி குணமாகலையே, டாக்டர்."

"நீங்களே இப்படி அவசரப்பட்டால், இன்னும் ரெண்டு, மூணு வருஷமா வர்றவங்க என்ன சொல்லுவாங்கன்னு யோசிச்சுப் பார்த்தீங்களா...?"

— சீர்காழி வி. ரேவதி.



இல்லை! இல்லை! உனக்காவது வானத்தில்
நட்சத்திரப் பிரஜைகள் இருக்கிறார்கள்.

எனக்குத் துணையாய் வெறுமையும்,
தனிமையும்
தவிர வேறில்லை.

ஆயிரம் ரசிகர் கூட்டி உனக்கு வரவேற்பு விழா
நடத்த நினைத்தேன்.

எல்லோரும் தூங்கிவிட்டார்கள்.

இருப்பது நான் மட்டும்.
நடப்பது இரங்கல் கூட்டம்.

நீ சர்வாலங்காரம் செய்து சபைக்கு வரும்
போதெல்லாம் இந்தப் பூமி போர்வைக்குள்
போய் விடுகிறதே!

அந்தத் தேம்பல்தான் உனக்குத் தேய்
பிறையா?

முதுகு திருப்பிக் கொண்ட குழந்தைக்கும்
முத்தம்
கொடுப்பாளே தாய்! அந்த வாஞ்சைதான்
உனது வளர்பிறையா?

பிரபஞ்சத்தில் பெரிய கல்லறை — பூமிதான்.
இதில் இன்னும் புதையாமலிருக்கும்
பிணங்களை
வாழ அழைக்கிறேன்.
வர மறுக்கிறார்களே!

முட்டைக்குள்ளேயே வாழ்க்கை நடத்தி
முடித்து
விடாதீர் குஞ்சுகளே!

ஓடிவிட்டு வாருங்கள் என்கிறேன்.
உடன்பாடில்லையே!

எத்தனை லட்சம் ஆண்டுகளாய் எரிகிறாய்
நிலவே!

ஆனால் எத்தனை மனிதன் உன்னை
உட்கார்ந்து
பார்த்தான்?

பிள்ளை பருகாத போது தாய்ப்பால்
கட்டிய முலை வலிக்குமாமே! அப்படி
உனக்கும்
நெஞ்சு வலித்திருக்காதா நிலவே?

இவர்களுக்காக இரக்கப்படுவதா?
துக்கப்படுவதா?

இவர்களுக்கு வயிற்றுக்கு மேலே இன்னொரு
வாழ்க்கையில்லை.

வாழ்க்கையின் வெயில் மறைவுப்
பிரதேசங்கள்
விளங்கவில்லை.

நிலாவே! உனக்கு மாதத்தில் ஒரு நாள்
பௌர்ணமி.

இவர்களுக்கோ எப்போதும்
அமாவாசைதான்.

செத்தால் மட்டுமே சுடுகாட்டுக்குப் போகிற
சிலரைப் போல இவர்கள் பகலா இரவா
என்று சொல்ல மட்டுமே பௌர்ணமி
பார்க்கிறவர்கள்.
இவர்களை எப்படி இதயானுபவத்துக்கு
இட்டுச் செல்வது?

இவர்களின் விலங்குத் தோலுரித்து எப்படி
மனிதன் எடுப்பது?
காதுகளுக்குக் கதவு தயாரித்துக் கொண்ட
வர்களுக்கு நான் சாரங்கி வாசிப்பது
சாத்தியமா?

என் கண்ணீரை நீயாவது புரிந்து கொள்
நிலாவே!

ஏனென்றால் இங்கே ஒவ்வொரு கண்ணும்
தனக்காக அழுவதற்கு மட்டுமே தயாரிக்கப்
பட்டிருக்கிறது.

ஆனால் — என் கண்ணீர், மழை மாதிரி
பொதுக் கண்ணீர்.

இந்தச் சமுகத்தில் ஆழ்வார்களின், நாயன்
மார்களின் கண்ணீரே அர்த்தப்படாத போது
இந்தப் புல் அழுத கண்ணீரா புரியப்
போகிறது?

நீயாவது புரிந்து கொள் நிலாவே!"

அந்த இரவின் ஏகாந்த வெளியில்
அப்போது
மூன்று அருவிகள்.

ஓசையோடு ஓர் அருவி —
மலையிலிருந்து.

ஓசையில்லாமல் இரண்டு அருவிகள் —
அவன் விழிகளிலிருந்து.

"எழுந்திருங்கள் திருஞானம்!
பெண்களில் அதிகமாய்ச் சிரிப்பவர்களையும்
ஆண்களில் அதிகமாய் அழுகிறவர்களையும்
நான் மதிப்பதில்லை."

குரல்!

பெண் குரல்!

இலைகள் கூட அசையச் சம்மதிக்காத இந்த
மௌன ராத்திரியில் இதழ்களின்
அசைவுகளா?
அதுவும்... பெண்ணின் இதழ்கள்!

நிமிர்ந்தான் திருஞானம்.

அவன் இமைகளும் ஆடாத இலைகளாயின!

கண்களைக் கசக்கிக் கண்ணீர்த்திரை
விலக்கினான்.

தொட்டுவிடும் தூரத்தில் ஒரு கூடிதார்ச்
சிற்பம் —
நிலாவில் நனைந்து நின்றிருந்தது.

அறிவு மிதக்கும் கண்களும்,
முகத்தின் அழகை
முன்மொழிந்த மூக்கும், ஒரு கவிஞனின்
கர்வத்தைப்போல் நிமிர்ந்திருக்கும் நெஞ்சும்
இருபதைத் தொடத் துடிக்கும் இளமையும்—
அச்சத்தைக் காலணியாய்ப் போட்டிருக்கும்
அலட்சியமும் அவளை அடுத்த
நூற்றாண்டுப்
பெண் என்றே அறிவித்தன.

இது பிரமையா?

இல்லை... ஒரு துண்டுக் கனவின்
தொடர்ச்சியா?

நிலாவை நான் பெயர் சொல்லி
அழைத்தேனா?
இல்லை... நிலா என் பெயர் சொல்லி
அழைத்ததா?

இது என்ன...!
தண்ணீரில் தீப்பிடித்தது மாதிரி
சம்பந்தம்
இல்லாமல் ஒரு சம்பவம்?

சிறகுகள் இல்லை;
இவள் தேவதை இல்லை!
இவள் ஆவி இல்லை;
எனக்கு அதில் நம்பிக்கையும் இல்லை!

யார்?
யார் நீ?

"என்னைப் பெயர் சொல்லி அழைக்கும்
பெண்ணே!
நீ யார்? என்னை அழவிடு பெண்ணே!
நிலாவில் உள்ள களங்கம்போல் என் முகமும்
கண்ணீரால் கறையாகட்டும்."

"இல்லை திருஞானம்!
நிலாவின் களங்கம் அழுது வந்ததில்லை;
கண்ணீர் என்பது கறையுமில்லை!

காட்டுப்பன்றிகள் வெளியேறும் நேரம்.
எழுந்திருங்கள் பொடி நடையாய்ப் போய்
விடலாம்."

"இல்லை
நிலா விழும்வரை நான் அழவேண்டும்.
நீ யார்?
என்னை உனக்குப் புரியாது.
போய்விடு!"

"உங்களை எனக்குப் புரியும்; இந்த
ஜனங்களுக்குத்தான் புரியாது!"

"ஏன் புரியவில்லை?

வானத்தைத் திறந்து பாருங்கள் என்றேன்;
வாழ்க்கையைத் திறந்து பாருங்கள்
என்றேன்;
சுகங்களில் மிதந்து பாருங்கள் என்றேன்;
ஜோதியில் கலந்து பாருங்கள் என்றேன்;

இது புரியவில்லையா?

இந்த உச்சிப் பாறைக்கு வரமாட்டார்களா
அந்த ஊமை ஜனங்கள்?"

"வருவார்கள்!"

"எப்போது?"

"தற்கொலைக்கு மட்டும்!"

— இன்னும் செல்வேன்.

---

## மாதம் ஒரு தொகுதி



### நாட்ராம்பள்ளித் தொகுதி வாசிகளே!

மாதம் ஒரு தொகுதி திட்டத்தின் கீழ், கல்கி சுற்றுப்பயணம் செய்யவிருக்கும் பத்தாவது தொகுதி உங்களுடையதுதான். உங்கள் தொகுதி பற்றிய கடிதங்களை 24.11.90 க்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்பி வையுங்கள்.

— ஆசிரியர்

# நட்புறவுகளை வளர்ப்போம்

ஒருமித்த சிந்தனையுடனும், பக்தி சிரத்தையுடனும் தேசிய ஒருமைப்பாட்டுக்கு உழைத்தவர்களுக்கு இந்திரா காந்தி பெயரால் ஆண்டுதோறும் தேசிய ஒருமைப்பாடு விருதும் ஒரு லட்சம் ரூபாய் பரிசுத் தொகையும் வழங்கப் படுகிறது. இந்த ஆண்டு இவ்விருது, தமது தெய்வீக இசையால் இந்தியாவை மட்டுமின்றி உலகையே ஒருமைப்பாட்டில் இசைவிக்கும் திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மிக்கு அளிக்கப்பட்டது. அத்தருணத்தில் திருமதி எம். எஸ். வழங்கிய ஏற்புரை:

மதிப்பிற்குரிய ராஜீவ்ஜி, இந்திரா காந்தி விருது கமிட்டி உறுப்பினர்களே, சகோதர சகோதரிகளே,

காஞ்சி முனிவர் ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுக்கு என் வந்தனங்களைச் செலுத்தியபடி, தேசிய ஒருமைப்பாட்டுக்கான இந்திரா காந்தி நினைவு விருதைப் பணிவுடன் ஏற்றுக் கொள்ள இன்று உங்கள் முன் நிற்கிறேன்.

எனக்கு அளிக்கப்பட்ட கௌரவம் எவ்வளவு உயர்வானது என்பதை நன்கு உணர்ந்திருக்கிறேன். இந்த விருது, என்னைச் சகோதரி போல் நேசித்த ஒருவரின் பெயரால் வழங்கப்படுகிறது.

ஆறு வருடங்களுக்கு முன்னால், இதே நாளில், அமரத்துவம் அடைந்து இந்திய சரித்திரத்தின் அமரநாயகர்கள் வரிசையில் இடம் பிடித்துக் கொண்ட இந்திராஜிக்கு எனது அன்பு கலந்த மரியாதையைக் காணிக்கையாக்குகிறேன்.

1955 ஆம் ஆண்டில், என் கணவரும் நானும் தீன் மூர்த்தி பவனில் ஜவாஹர் லால்ஜியின் விருந்தினர்களாக இருந்த நாட்களுக்கு என் நினைவுகள் பின்னோக்கிச் செல்கின்றன. நேரு இல்லத்தின் தலைவியாக இருந்த இந்திராஜி எங்களைக் கவனித்துக் கொண்ட பாங்கு, நாங்கள் அந்த மேன்மையான குடும்பத்தினருடன் ஒரு விசேஷ அன்புத் தளையை ஏற்படுத்திக்





கொள்ளக் காரணமாயிற்று. அந்த அன்புத் தளையில் மேலும் ஓர் அழகிய இழை சேர்த்து வலுப்படுத்தியிருக்கிறார் ஸ்ரீ ராஜீவ் காந்தி. எனக்கு மேன்மையான இக்கௌரவத்தை அளித்து நன்றிக்கடனுக்குட்படுத்திய ஸ்ரீ ராஜீவ்ஜி, ஸ்ரீ நரசிம்மராவ் மற்றும் அவர்களுடைய சகாக்களுக்கு எனது முழுமையான நன்றியைத் தெரிவிக்க வார்த்தைகள் இல்லை.

**கா**ங்கிரஸ் இயக்கத்தின் நூற்றாண்டு நினைவாகவும் இவ்விருது வழங்கப்படுகிறது என்பது எனக்குப் பெரும் மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் அளிக்கிறது. என் கணவருக்கு இந்திய சுதந்திர இயக்கச் சரித்திரத்துடன் நீண்ட, நெருங்கிய தொடர்பு உண்டு. நம் சுதந்திரத்துக்காக அவர் சிறைவாசம் அனுபவித்தது உங்களுக்குத் தெரிந்திருக்கும். ஜனவரி 1922 இல் மகாத்மா காந்தி நடத்திய நாடு தழுவிய முதல் சத்தியாக்கிரஹத்தில் பங்கேற்று, இருபது வயதைக் கூட எட்டாத நிலையில் பதினைந்து மாதங்கள் கடுங்காவல் தண்டனை அனுபவித்தார். அப்போது தம்முடன் ஹிந்துக்களும், முஸ்லிம்களும், சீக்கியர்களும் சிறைவாசம் செய்ததை நினைவு கூர்கிறார் என் கணவர். கடுங்காவல் தண்டனை தேசிய ஒருமைப்பாட்டுப் பாடத்தை அவருக்குப் புகட்டியது. இச் சிறைவாசம் முடிந்து வெளியேறிய ஒரே வாரத்துக்குள் மீண்டும் கைதாகித் திருச்சி மத்தியச் சிறைச்சாலையில் வைக்கப்பட்டார். அங்கு இனிய ஆச்சரியமாக ஒருநாள் ராஜாஜி விஜயம் செய்து இவரைச் சந்தித்தார்.

இத் தருணத்தில், எங்கள் இருவர் வாழ்விலும் ராஜாஜி எவ்வளவு மகத்தான பங்கு வகித்தார் என்பதை எண்ணிப் பார்க்கிறேன். ராஜாஜியும் காஞ்சி முனிவருமே எங்களுக்கு எல்லாமாக இருந்து, எங்கள் வாழ்க்கையை வியாபித்தனர்.

**ஹி**ந்தியில் மீரா திரைப்படத்தைத் தயாரித்தார் என் கணவர். டில்லியில் அப்படத்தின் முதல் காட்சி திரையிடப்பட்டது. பண்டிட்ஜி தாமே அப்படத்தைத் தயாரித்து வெளியிட்டது போல் வாசலில் நின்று அச்சிறப்புக் காட்சிக்கு அழைக்கப்பட்டிருந்த பிரமுகர்களை வரவேற்றார்!

அத்திரைப்படம் தயாரிக்கப்பட்ட போது பக்த மீராபாயின் வாழ்வுக் காலத்தை மீண்டும் வாழ்ந்தபடி நாங்கள் வட இந்தியாவின் பல பகுதிகளிலும் சுற்றுப் பயணம் செய்தோம்.

அன்று முதல், இந்திய ஒருமைப்பாடு க்ஷேத்திரங்கள் பலவற்றுக்கும் ஓர் எளிய பக்தையாக நான் யாத்திரை செய்து கொண்டிருக்கிறேன்.

தென்னிந்தியாவின் கர்நாடக இசை மும்மூர்த்திகள், புரந்தரதாஸர், அன்னமாச்சாரியா, நாராயண பட்டத்ரி, மேற்கிந்தியாவின் துகாராம், நரசி மேத்தா, வட இந்தியாவின் நானக், கபீர், துளசிதாஸ், சூர்தாஸ், மீரா, கிழக்கிந்தியாவின் குருதேவ் ரபீந்தர்நாத் தாகூர், ஆகிய மகான்களின் உன்னதக் கருத்துக்களை இசை மூலம் வெளிப்படுத்தும் ஒரு கருவியாக நான் இருந்திருக்கிறேன். இதைக் காட்டிலும் பெரிய கௌரவம் ஏது? அந்த மகான்கள் அனைவரது ஆன்மாக்களையும் வேண்டி, எல்லாம் வல்ல இறைவனையும் வணங்கி, நம் பாரத தேசத்தின் புதல்வர்களுக்கும், புதல்விகளுக்கும் அருள் புரியக் கோருகிறேன்.

**தே**சிய ஒருமைப்பாட்டுக்கான இவ்விருதை மிகவும் பணிவுடன் ஏற்கிறேன்; இவ்விருதுக்கான தொகையை நம் நாட்டுச் சகோதரர்களுடன் பகிர்ந்து கொள்ள என் கணவரும் நானும் விரும்புகிறோம். இந்து, முஸ்லிம், சீக்கியர், கிறிஸ்துவர் என்ற பேதமின்றி, மனிதர்களாக இந்தியா முழுவதிலுமிருந்தும் மக்கள் திரண்டு வரும் இடம் சென்னையில் உள்ள கான்ஸர் இன்ஸ்டிடியூட். டாக்டர் சாந்தா, டாக்டர் கிருஷ்ணமூர்த்தி தலைமையில் நடக்கும் இந்நிறுவனம் ஆற்றி வரும் மனிதநேயமிக்கத் தொண்டை உள்ளன்புடன் பாராட்டி, விருதுத் தொகையை அந்நிறுவனத்துக்கு வழங்குகிறோம். அதே சமயத்தில் வெறுப்புணர்ச்சி, பிரிவினை வாதம் ஆகிய புற்றுநோயிலிருந்து நம் நாடு முற்றிலும் விடுபட்டுக் குணமடைய வேண்டும் என்றும் பிரார்த்தித்துக் கொள்கிறோம்.

காஞ்சி முனிவர் அருளிய "'மைத்ரீம் பஜத' என்று தொடங்கும் பாடல் வரிகளைக் காட்டிலும் இன்றையச் சூழலுக்குப் பொருத்தமான பிரார்த்தனை கீதம் வேறு இருக்க முடியாது.

• **நட்புறவுகளை வளர்ப்போம்.**

**புகைப்படம்: நன்றி: ஹிந்து.**

---



**"ஆளுங்கட்சியில் இருப்பவர்களுக்குப் பல்கலைக் கழகங்கள் 'டாக்டர்' பட்டம் தருவது பற்றி எங்களுக்குக் கவலை இல்லை. அதே சமயம் எங்களுக்கு இஞ்சினீயர், வழக்கறிஞர் பட்டங்களாவது தரக்கூடாதா...?"**

**— ஏ. ஆர். வீரராகவன்.**

# கானல் நீரா? ரோல்ஸ் ராய்ஸ் காரா?

30

**ஆரோக்கிய ரகசியம்:**
**வி. என். குமாரசாமி.**

சென்ற வாரம் இந்தப் பகுதியில் வெளியான இரண்டு கார்ட்டூன் சித்திரங்களை வாசகர்களில் சிலர் பார்த்து விட்டு, 'இப்படி எதற்காகப் போட்டிருக்கிறது?' என்று யோசித்திருக்கக்கூடும். ஒரு சித்திரத்துக்கு ''மருத்துவம் அளிக்கும் ஆரோக்கியம்'' என்றும் மற்றொரு சித்திரத்துக்கு ''யோகாசனம் அளிக்கும் ஆரோக்கியம்'' என்றும் தலைப்புத் தந்து பார்த்தால் புரிந்து போகும்! மருத்துவம் தரும் ஆரோக்கியம், வந்த பின் குணப்படுத்துவது. மீண்டும் நோய் வராது என்பதற்கு உத்தரவாதமில்லை. எக்கச்சக்கப் பணச் செலவு வேறு! எனவே அந்த ஆரோக்கியம் கானல் நீர் போன்றது. ஆனால் யோகாசனம், வருமுன் காப்பது. யோகாசனம் பயில்பவர்களை நோய்கள் நெருங்காது. எனவே அது அளிக்கும் ஆரோக்கியம் மெய்யானது; நிரந்தரமானது; ராஜபாட்டையில், ரோல்ஸ் ராய்ஸ் காரில் பயணம் செய்வதைப் போன்றது!

இந்தத் தொடரில் கூறப்படாத ஆசனங்கள் எத்தனையோ உள்ளன. அர்த்த மத்ஸ்யேந்திராசனம், யோக முத்ரா, திரிகோணாசனம், பாத ஹஸ்தாசனம், உட்டியாணா, நௌலி, ஜானு சிர்ஷாசனம், வஜ்ராசனம் என்று இவ்வாறு மேலும் பலவற்றைப் பற்றிக் கூறிக் கொண்டே போகலாம். ஆனால் இன்றைய அவசர யுகத்தில், அதிகபட்சம் 30 – 40 நிமிஷங்கள் ஒருவர் ஒரு நாளைக்கு ஆசனங்களுக்கு என்று ஒதுக்க முடிந்தாலே பெரிய காரியம் என்பதால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். மேலும் செய்ய அவகாசமும் ஆர்வமும் உள்ளவர்கள் மேற்படி ஆசனங்களைப் பற்றி யோகாசன நிபுணர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு அவற்றைப் பயிலலாம்.

கல்கியில் இந்தத் தொடரைப் படித்து ஆசனம் பழக ஆரம்பித்தவர்கள் கூட யோகாசன நிபுணர்களை அணுகி, செய்து காட்டித் தாங்கள் சரியாகத்தான் செய்கிறோமா என்று உறுதிப்படுத்திக் கொள்ளலாம். என்னதான் விவரமாக எழுதினாலும் ஆசானிடம் நேரடியாகப் பயில்வதற்கு ஈடாகுமா? கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டு ஆரம்பித்து விட்டால், பிறகு ஆசனங்கள் செய்வதை நிறுத்தவே மனம் வராது! காரணம், உடம்பு புத்துணர்ச்சியையும் உள்ளம் ஒரு புதிய உற்சாகத்தையும் பெறுவதை உணர்வீர்கள்.

ஒரு நாளைக்கு முக்கால் மணி நேரம் அல்லது ஒரு மணி நேரம் ஒதுக்க முடியுமென்றால் அதற்கேற்ப எந்தெந்த ஆசனங்களை எத்தனை நிமிஷங்கள் செய்யலாம் என்பதற்கு ஓர் அட்டவணை தயாரித்து அதன்படிச் செய்து வரலாம். இந்தத் தொடரை ஆரம்பத்திலிருந்து தொகுத்து வைத்திருப்பவர்களுக்கு இத்தகைய அட்டவணை தயாரிப்பது எளிது. அப்படி





# யோகாசனம் அளிக்கும் ஆரோக்கியம்

இல்லாதவர்களும் நண்பர்களைக் கேட்டோ, நிபுணர்களை அணுகியோ ஒரு திட்டத்தை வகுத்துக் கொள்ளலாம்.

ஆசனங்கள் செய்வது முதியவர்களை விட இளைஞர்களுக்கே நல்லது. ஏன், ஏழெட்டு வயதிலிருந்தே குழந்தைகள் ஆசனம் பழக ஆரம்பிக்கலாம். இத்தகைய வர்களை நோய்கள் பிடிக்காது; முதுமை பாதிக்காது. நமது அரசாங்கம் எது எதற்கோ பணத்தை அள்ளிக் கொட்டுகிறது: பள்ளிக் கூடங்களில் யோகாசனம் கற்றுத் தரப்பட வேண்டும் என்று ஏற்படுத்தி விட்டால் போதும். ஆஸ்பத்திரிகளில் கூட்டமே இராது! டாக்டர்கள் ஈயோட்டிக் கொண் டிருக்க வேண்டியதாகிப் போகும்!

ஆசனங்கள் பழக எண்ணுவோர் முக்கியமாகக் கடைப்பிடிக்க வேண்டிய விதி முறைகள் பற்றி ஏற்கெனவே சொல்லியிருக் கிறேன். என்றாலும் மீண்டும் ஒருமுறை நினைவூட்டுகிறேன்:

1. காலையில் காலைக் கடன்களை முடித்தபின் செய்வது நல்லது. 2. காலையில் நேரம் இல்லாதவர்கள் வேறு நேரத்தில் செய்யலாம்; ஆனால் வயிறு காலியாக இருக்க வேண்டும். 3. காற்றோட்டமுள்ள, சுத்தமான அறையில் செய்ய வேண்டும். 4. மெத்தை கூடாது. துணி விரிப்புத்தான் நல்லது. 5. ஆசனங்களை வரிசைக் கிரமமாகச் செய்ய வேண்டும். 6. பரபரப்பு, படபடப்பு, முரட்டுத்தனம் எதும் கூடாது. நிதானமாக முன்னேறி நாளடைவில் உடலை வசப்படுத்த வேண்டும். 7. பெண்கள் கருவுற்ற சமயத்தில் ஆசனங்களைக் குறிப்பிட்ட காலம் வரைதான் செய்யலாம். 8. நோயுற்றவர்கள் நோய் நீங்க ஆசனம் பழகலாம்; ஆனால் நிபுணர்களின் ஆலோசனைப்படிதான் செய்ய வேண்டும். 9. ஒவ்வொரு ஆசனம் செய்து முடித்த பிறகும் சாந்தி ஆசன நிலையில் ஓய்வு எடுக்க வேண்டும். 10. கடைசியாகப் பிராணாயாமமும் அதன்பின் சாந்தி ஆசனமும் செய்து முடிப்பது நல்லது. 11. ஆசனங்களை மனம் ஒன்றிச் செய்ய வேண்டும். உடல், மனம் இரண்டுக்குமே பயிற்சி அளிப்பதுதான் யோகாசனங்கள் என்பதை மறக்கக் கூடாது. 12. இவை எல்லாவற்றையும் விட அதிக முக்கியமான விஷயம், 'நாம்தான் ஆசனம் செய்கிறோமே அதனால் நமக்கு ஒரு கெடுதலும் நேராது. ஒரு நோயும் வராது' என்று எண்ணிக் கொண்டு தாறுமாறாக நடந்து கொள்ளக் கூடாது. உதாரணமாக 'நான் சிரசாசனம் செய்வதால் என் கண்கள் பாதிக்கப்படவே செய்யாது' என்று எண்ணிக் கொண்டு அடிக்கடி சினிமா பார்ப்பதோ, நீண்ட நேரம் டீவி வீடியோ பார்ப்பதோ கூடாது. 'நான்தான் தனுராசனம் செய்கிறேனே; எனக்கு அஜீரணமே ஏற்படாது' என்று கருதி, பெருந்தீனி தின்னக் கூடாது. இதற்காகத் துறவு மனப்பான்மையும் தேவையில்லை. 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம்' என்பதை மறவாமல் இருந்தால் போதுமானது. சிகரெட் பிடிப்பது, குடிப்பது போன்றவை யோகாசனத்தின் நற்பலன்களையெல்லாம் அழித்துவிடும். இத்தகைய கெட்ட பழக்கங்களை அடியோடு தவிர்க்க வேண்டும். யோகாசனத்துடன் கூடவே நியமமான வாழ்க்கைக்கும் முயற்சி எடுக்க வேண்டும். அத்தகைய முயற்சிக்கு யோகாசனம் மனோதிடத்தை அளித்துத் துணை புரிந்து வெற்றி தேடித் தரும்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.

(முற்றும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

